உ

# தமிழ்ப் பொழில்

## தஞ்சைக் கரந்தைத் தமிழ்ச் சங்கத் திங்கள் வெளியீடு

துணர் ௰௭ } விசு—மாசி 1942—பிப்ரவரி { மலர் ௰௧

உ

## பொழிற்றொண்டர் கருத்துரைகள்

### அருண்மிகு ஞானியாரடிகளார் மறைவு

'துயர் இலங்கும் உலகு' என ஆளுடைய பிள்ளையார் அறிவுறுத்தியபடி இவ்விசுவாண்டில் தமிழகத்தார்க்குத் துன்பங்களே தொடர்ந்து வருகின்றன. முதலில் நம் சங்கத்தைத் தம்முயிரெனப் போற்றி வளர்த்த குரிசில் செந்தமிழ்ப் புரவலர் தமிழவேளவர்கள் நம்மை விட்டுப்பிரிந்து நம்மனோரைத் துயர்க்கடலில் ஆழ்த்தினார்கள். அடுத்தும் பலதமிழறிஞர்கள் நம்மை விட்டுப் பிரிந்தனர். அந்தோ நம் தமிழ் நாட்டிலே தமிழ்நூற் பொருளுரையாகிய அமிழ்த மழையைப் பொழிந்து மன்பதை நன்புலங் குளிர்விக்குந் திருவருட்கொண்டலாக இஞ்ஞான்று நிலவிய அருட் குரவர் திருப்பாதிரிப் புலியூர் அருண்மிகு ஞானியார் அடிகளார் பழநியம்பதியில் முருகனை வணங்கி வரும் வழியில் பழநிக்கருகில் 1-2-42 ஞாயிறு காலை தமிழ்த் தலைவனாகிய செவ்வேள் திருவருளிற் கலந்து நம்மையெல்லாம் இடர்க் கடலிலாழ்த்திப் பிரிந்தார்கள் என்னும் செய்திகேட்டுத் தமிழகம் பெருந்துயருறுகின்றது. "துன்பக்கடலிடைத் தோணித் தொழில் பூண்டதொண்டராக" விளங்கித் தம் அன்பின் பெருக்கால் தமிழக மக்களை நல்வழிப்படுத்திய அடிகளார் இவ்விடருறுபொழுதில் நம்மைப்பிரிந்து சென்றார்களே? இஃது அவர்தம் அருட்பண்பிற்கு ஏற்புடையதாமோ எனத் தமிழர் யாவரும் கண் கலங்குகின்றார்கள்.

அருட்டிரு ஞானியாரடிகளாராய தவமுனிவர் சோழநாட்டில் திருநாகேச்சரத்தில் வீரசைவ மரபினராகிய அண்ணாமலை ஐயருக்கும் பார்வதியம்மையாருக்கும் ௲௮௱௭௰௩ வைகாசி ௴ ௪ (17-5-1873) வியாழக்கிழமை மூலநாளிற்றோன்றிப் பழநி யெனப் பிள்ளைத் திருப் பெயர் பெற்றுத் தமிழ் தெலுங்கு, ஆங்கிலம், வடமொழி ஆகிய நான்கு மொழிகளையும் நன்கனம் பயின்று தமது பதினாறுவதாண்டில் திருக்கயிலாய வழிமுறை திருக்கோவலூராதீனம் ஐந்தாம் பட்டத்து சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாச்சாரிய அடிகளாரென்னும் சிறப்புப்பெயருடனமர்ந்து தமிழ் முருகன் திருவருள் பெற்று வாணிவிலாசசபை, சைவசித்தாந்த

மகா சமாசம் முதலிய மாபெருங்கழகங்களைத் தோற்றுவித்துத் தமிழ்நாடுமுழுதுமெழுந்தருளித் தேனினுமினிய தம் தமிழ் நூற் சொற்பொழிவுகளாற் சைவம் வளர்த்துத் தமிழ்மொழி போற்றி அருண்மொழி நாவலராய் மிளிர்ந்து பல நன் மாணவர்க்குத் தமிழறிவுறுத்தி நல்லாசிரியராய்ச் சிறந்து மணிவிழாவில் மகிழ்ந்து கல்விக்கழகம் நிறுவிப் பொன்விழாவிற் பொலிந்து ஐம்பத்திரண்டாண்டுகள் தமிழர் சமயத்தலைவராய்த் திகழ்ந்து திருப்பழநியெல்லையில் தமது அறுபத்தொன்பதாவதாண்டில் (1-2-42) தைப்பூசநாளில் சிவ நிலையெய்தி நம்மனோரைப் பிரிந்து சென்றார்கள். அந்தோ என்செய்வேம். அடிகளார் தாம்அடைதற்குரிய பேற்றினையடைந்துவிட்டார்கள். எனினும் அவர்தம் உரைவழிநின்று தமிழகம் அடையும் நலனைப் பெரிதும் நம்மனோர் நன்குணரா முன்னம் பிரிந்தமை நீங்கா வருத்தத்தைத் தருகின்றது.

தென்னாட்டில் செந்தமிழ்ச் செஞ்ஞாயிறாக விளங்கிய, அருண்மொழி நாவலர்கோன் திரு. ஞானியாரடிகளின் மறைவு தமிழகத்துள்ளாரைத் துடுமெனக் கலங்கச்செய்திருக்குமென்பதற்கையமில்லை இவர்களின் மறைவு குறித்துத் தமிழ்நாட்டிலுள்ள பல கழகங்களும் தம் ஆற்றொணுத் துன்பத்தை வெளியிட்டிருக்கின்றன. தமிழ் ஆரியம் ஆங்கிலம் தெலுங்கு ஆகிய நான்கு மொழிகளிலும் அடிகள் புலமை நிரம்பியவர்கள் என்பதை அறிஞர்கள் நன்கு அறிவார்கள். புலமை நிரம்பிய புலமையாளனும், தான் கற்ற நூல்களை விரித் துரைக்கும் ஆற்றல் அற்றவனுயின், அவன் புலமையை உலகம் மதித்துப் போற்றுது. அடிகள் புலமைக்கோர் வரம்பாய்க் கற்றாரும் கல்லாரும் உளங்கொளக், கேட்டார்ப் பிணிக்கும் தகையவாய்க், கேளாரும் வேட்பமொழியும் வீறுபெற்று விளங்கினார்கள். அடிகள் காலவரையறையின்றிப் பன்னூல்களி னின்றும் மேற்கோள் எடுத்துக் காட்டிச் சொற்பொழி வாற்றி மக்களைத் தெருட்டும் நீர்மை எம்மை யெல்லாம் மருளச் செய்தது. அடிகளின் சொற்பொழிவைக் கேட்டுப் பெரு வியப்படைந்த பேரறிஞர் ஒருவர், "இங்கு அடிகள் பேசுகின்றாரா? தெய்வம் பேசுகின்றதா?" என அயலி லுள்ளாரை மருட்கையோடு வணங்கி வினவின ரெனின் அடிகளின் பெருமையை யாம் என்னென்பேம். வடமொழியிலுள்ள உபநிடதங்களிலும் பன்னூல்களிலும் உள்ள சுலோகங்களை வடமொழியாளரும் வியக்கும் முறையில் அடிகள் ஒலிக்குறைவின்றிப், பதச்சேதஞ் செய்து பொருத்திக் காட்டிப் பொருள் விளக்கும் பொழுது அவர்களுக்குள்ள வடமொழிப் புலமையைக் கண்டு போற்றாதார் யார்? தமிழ் மொழியிலுள்ள ஒவ்வொரு பாக்களையும் அடிகள் பதச் சேதஞ்செய்து, கொண்டு கூட்டும் முறையைக் கண்டு என்னே! என்னே!இன்றி னூங்கே கேளலம் யாம் எனப் பலகால் இறும்பூ தெய்தியதுண்டு. இங்ஙனம் சொல்லாற்றல் பெற்றவராய், சொல்லின் செல்வராய், எண்பொருளவாகச் செலச் சொல்லிக் கற்றதுணர விரித்துரைக்கும் உரவோராய் விளங்கிய, எம் அருட்குரவர், மறைந்தார்.

அடிகள் நிகழ்த்திய சொற்பொழிவுகள் யாவும் தனியே ஒவ்வொரு நூலாக வெளியிடத்தக்க பெருமைவாய்ந்தன. அவர்கள்

## பொழிற்றொண்டர் கருத்துரைகள்

சொற்பொழிவுகளை யெல்லாம் தமிழிற் சுருக்கியெழுதும் சுருக்கெழுத்தாளர் இருந்து எழுதி நூலாக்கி வெளியிட்டிருப்பின், தமிழ் மக்கள் எல்லோரும் படித்தின்புற ஓர் வாய்ப்பு ஏற்பட்டிருக்கும். அந்நூல்களைப் படித்தாவது யாம் ஆறுதல் அடைவேம். அடிகள் சொற்பொழிவினை ஒலித் தட்டில் பதித்திருப்பின் தமிழ் நாடு கேட்டு மகிழ்ந்து தம் அக இருளைப் போக்கிக்கொள்ள அஃது ஓர் ஏதுவாயிருக்கும். தமிழ்நாடு அத்தகையபேற்றை இழந்துவிட்டது. தேர்தல் கருதியும், பிற வீண் ஆரவார நீர்மை கருதியும் எத்துணையோ பொருள்களை வாரி இறைக்கும் தமிழ்ச் செல்வர்கள் இத்தகைய நல்ல தொண்டில் தங்களுடைய பொருள்களைச் செலவிட்டிருப்பராயின் அதனால் தமிழகத்திற்கு விளையும் நன்மைகளை யாரால் அளவிட்டுரைத்தற்கியலும்? அந்தோ! தமிழர் பெரிதும் இரங்கத்தக்கார்.

அடிகள் நம் கரந்தைத் தமிழ்ச் சங்கத்தின்பால் பேரன்புகொண்டவர். நம் சங்க உறுப்பாயுள்ள பலகிளைகளும் நன்கு தழைத்து ஓங்கி வளம்பெற வேண்டும் என்று முருகன் அருளை வேண்டியவர்கள். நம்சங்கத்தின் ஏழாம், எட்டாம் ஆண்டு விழாவில் தலைமை தாங்கி, நல்லுரை வழங்கி அருளியவர்கள். நம் சங்கத் தலைவராயும், தமிழர்களின் தனிப்பெருந் தலைவராயும் விளங்கிய திருவாளர், இராவ் **சாகிபு, த. வே. உமாமகேசுவரம் பிள்ளை** B.A.B.L. அவர்களுக்கு, அடிகள் அறுபதாம் ஆண்டுவிழாக் கொண்டருளிய நன்னாளில், **"செந்தமிழ்ப் புரவலர்"** என்ற பட்டத்தை வழங்கி அருளி, "நாடோறும் முருகனருளை வேண்டி, யான் எண்ணும்பொழுது என் உளத்தில் முதலிடம் பெறுகின்றவர், த வே. உமாமகேசுவரம்பிள்ளை அவர்களே. அவரால் நடத்தப்பெறும் கரந்தைத்தமிழ்ச் சங்கமே", என மொழிந்து இச் சங்கம் செய்துவரும் தமிழ்த் தொண்டினைப் பாராட்டி நீடூழி வாழ வாழ்த்தியருளினார்கள். மேலும், நம் கரந்தைத் தமிழ்ச் சங்க வெள்ளி விழாவில் தலைமைதாங்கி, அடிகள் கூறிய முன்னுரையும், முடிபுரையும், எம் செவியில் இன்றும் ஒலித்துக் கொண்டிருக்கின்றன. அடிகள், எம் சங்கத் தலைவர், த. வே. உமாமகேசுவரம் பிள்ளையவர்கட்குச் சங்க வெள்ளி விழாவில் பல்லாயிரக் கணக்கான பேரறிஞர்கள் முன்னிலையில், **"தமிழவேள்"** என்ற பட்டத்தைச் சூட்டிப் பாராட்டினார்கள். அடிகள் திருவருள் வாழ்த்தொடு வெள்ளி விழாவில் திறக்கப்பெற்ற **புலவர் கல்லூரி** சென்னைப் பல்கலைக் கழகத்தார் ஒப்புதல் பெற்றுச் சிறப்புடன் திகழ்கின்றது. இங்ஙனம் பல்லாற்றானும் தமிழ்வளர்த்த அடிகளின் மறைவை எண்ணும்போது யாம் ஆருத்துயருறுகின்றேம். நம் தமிழவேளும் அடிகளும், ஒருவர்பின் ஒருவராகச் சென்றமை கருதின் எம் உளம் அனலிடைப்பட்ட மெழுகென உருகுகின்றது. எம் அடிகளை இழந்தோம். அண்ணலை இழந்தோம். இத்தகைய பெறுதற்கரிய சிறப்பெல்லாம் ஒருங்கமைந்த தமிழ்ப் பெரு மக்கள் எத்துணை நூற்றாண்டுகள் கழியினும், இனித்தோன்றுவரோ என ஏங்குகின்றேம்.

அடிகள் நாட்டியளித்த, 'சைவ சித்தாந்த சமாசம்' தமிழ் நாட்டில் தமிழ்

மொழிக்கும், தமிழ் மக்கட்கும் சிறப்பாக சைவ சமயத்திற்கும் செய்துவரும் தொண்டுகளை அறியாதார் யார்? இச் "சைவசித்தாந்த சமாசம்" இன்றேல், சங்க நூல்கள் அனைத்தையும் ஒரு நூலாகக் கண்டு கையிலேந்தி மகிழும் பேற்றைத் தமிழர் பெற்றிருப்பரோ? 'சீவக சிந்தாமணி' யென்னும் நூலை அடக்க விலைப் பதிப்பாக யாம் பெற்று அகமகிழ இயலுமோ? இத்தகைய பெரும்பணிகள் பல ஆற்றித் தமிழரை மகிழச் செய்யும் இச்சைவசித்தாந்த சமாசம் அடிகளின் அருளுள்ளம்போன்று தமிழ் நாட்டில் இலங்கி வருவதை அறியாதார் யார்?

அடிகள் திருப்பாதிரிப்புலியூரில் நாட்டிவைத்த "வாணிவிலாச சபை" என்னும் நற்கழகம் அவ்விடத்திலுள்ள ஏழை எளிய மக்கட்கு எத்துணைப்பயன் தந்துளது? தமிழ் நாட்டில் அடிகளின் சொல்லாலும், எழுத்தாலும், பொருளாலும், அவர்கள் பேரைச் சொன்னதனாலும் முன்னுக்கு வந்த மக்கள் எத்துணைபேர்? உயர்நிலைகளில் அமர்ந்து இன்பவாழ்வு நடத்துகின்றவர்கள் எத்துணைபேர்? தமிழர்க்குப் பற்றுக் கோடாய் விளங்கிய அடிகளைப் போன்று இனி ஒருவர் தோன்றல் அரிது! அரிது!! அரிது!!!

அடிகள் தமிழிற்கும், சைவத்திற்கும் ஆற்றிய செயல்களை யெல்லாம் எடுத்தெழுதின், ஒரு பெருநூலாய் விரியுமென அஞ்சி இத்துடன் நிறுத்துகின்றோம். அடிகளின் தோற்றப்பொலிவை எண்ணின் இப்பாடல் எம் நினைவிற்கு வருகின்றது.

"தூயவெண்ணீறு துதைந்த பொன்மேனியும்
தாழ் வடமும்

நாயகன் சேவடி தைவரு
சிந்தையும் நைந்துருகிப்

பாய்வதுபோ லன்பு நீர்பொழிகண்ணும்
பதிகச் செஞ்சொல்

மேய செவ்வாயும் உடையார்
புகுந்தனர் வீதியுள்ளே"

என்பதேயாம். இத்தகைய அருளுருக் கொண்டொளிர்ந்த பெரியார், தமிழ்க் கொடி ஏறிப் படர்தற்குரிய கொழுகொம்பாயிலங்கிய குரவர் அந்தோ மறைந்தார்.

அடிகள், தாம் ஒரு துறவியாயிருந்தும் திரு. இராசகோபாலாச்சாரியார் அவர்கள் அரசியலிலீடுபட்டு, இந்திமொழியைக் கட்டாய பாடமாகத் தமிழகத்தில் புகுத்திய பொழுது அச்செயலை மிகவும் வன்மையாகக் கண்டித்துரைத்தார்கள். இக்கட்டாய இந்தி தமிழ் மொழியின் பெருமையைக் குலைக்கும் எனக் கழறினர்கள். தமிழன் துறவியாயினும் உலகப்பற்றையெல்லாம் விட்டானாயினும் தாய்மொழிப் பற்று ஒன்றை மாத்திரம் விடக்கூடாது என்பதற்கு ஓர் இலக்காக எம் அடிகள் விளங்கினர்கள். இத்தகைய பேருட் குரவர், நன்ருற்றிய அறவோர், சிவசண்முக மெய்ஞ் ஞான சிவாச்சாரிய சுவாமிகள், ஞாலத்தாரால் ஞானியாரென அழைக்கப் பெற்றவர் மறைந்தார். இவர்களின் அருள் ஒளி தமிழகத்திற் பாய்ந்து தமிழர்களை வாழ்விப்பதாகுக, மேலும் இத்தகைய அருட்குரவர் தோன்றுவாராக.

இதுபோது திருக்கோவிலூராதீனத் துறவுநிலையத் தலைமையினை மேற்கொண்டு விளங்கும் அடிகளாரவர்கள் நம் அருண்மிகு ஞானியாரடிகள் பணித்த முறையே தமிழும் சமயமுந் தழைக்கப் பெருந் தொண்டு புரிந்து தமிழர் நலம் வளர்ப்பாராக.

(இதன் தொடர்ச்சியை 322-ல் பார்க்க)

# பாலைத் திரிபு

சுவாமி விபுலாநந்தர்

(முற்றொடர்ச்சி: துணர் ௰௭, மலர் ௰, பக்கம் 281)

**ப**ழந்தமிழ் வழக்கிலிருந்த ஏழ் பெரும் பாலையின் கூட்டமே தாரக்கிரமம் (காந் தாரக்கிரமம்) என எண்ண இடமுண்டு. பாலையின் கூட்டம் கிரமம் (கிராமம்). தனிப்பாலையினை வடநூலார் மூர்ச்சனை யென்பர். மூன்று கிரமங்களையும் உறழும் முறையினைக் காட்டப் புகுவாம்.

இராசிவீடு பன்னிரண்டினும் நரம்பு நிற்கும் வீடு இவையெனக் கூறும் உரைச் சூத்திரம் ஒன்றினை முன்னர்த் தந்தாம். அப்பொருள்பற்றிய உரைச்சூத்திரங்கள் இன்னும் இரண்டுஉள ; அவையாவன :

'இளியிடபங் கற்கடக மாம்விளரி சிங்கம்
தளராத தார மதுவாம — தளராக்
குரல்கோற் றனுத்துத்தம் கும்பங் கிளையாம்
வரலா லுழைமீன மாம்.'

'குராறலை விற்றுத்தங் கைக்கிளையே கும்பம்
பரிய வுழைமீனம் பாவாய் — அரிதாரம்
கொல்லே றிளிவிளரி கற்கடகங் கோப்பமைந்த
தொல்லே ழிசைநரம்பிற் காம்.'

இவை தாரக்கிரமத்திலே நரம்புகள் நிற்கும் இடங்களைக் கூறுவன.

இராசி வீடுகளையும் அலகெண்களை யும் வைத்து ,இம்முறையில் நரம்புகளை நிறுத்துவாம்.

| மே | இ | மி | கற் | சி | கன் | து | வி | த | ம | கு | மீ |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 3 | 1 | 3 | 1 | 1 | 3 | 1 | 3 | 1 | 3 | 1 |
| | இளி | | விளரி | தாரம் | | குரல் | | துத்தம் | | கைக்கிளை | உழை |

இளிநரம்பு மேடம் இடபம் இரண்டி னுக்குமுரிய 4 அலகு பெற்றது. விளரி மிதுன கற்கடகங்களுக்குரிய 4 அலகும், தாரம் சிங்கத்திற்குரிய 1 அலகும், குரல் கன்னி துலாத்திற்குரிய 4 அலகும், துத்தம் விருச்சிக தனுவிற்குரிய 4 அலகும், கைக் கிளை மகர கும்பத்திற்குரிய 4 அலகும், உழை மீனத்திற்குரிய 1 அலகும் பெற்றன.

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| 4 | 4 | 4 | 1 | 4 | 4 | 1 | மேற்செம்பாலை |
| 4 | 4 | 1 | 4 | 4 | 1 | 4 | செம்பாலை |
| 4 | 1 | 4 | 4 | 1 | 4 | 4 | படுமலைப்பாலை |
| 1 | 4 | 4 | 1 | 4 | 4 | 4 | செவ்வழிப்பாலை |
| 4 | 4 | 1 | 4 | 4 | 4 | 1 | அரும்பாலை |
| 4 | 1 | 4 | 4 | 4 | 1 | 4 | கோடிப்பாலை |
| 1 | 4 | 4 | 4 | 1 | 4 | 4 | விளரிப்பாலை |

இவை இவ்வாறுதலை அலகெண்களை ஒன்றின்பின் ஒன்றாகக் கூட்டிக் காண்க. பன்னிருபாலையிலே இவ்வேழும் வரும் பாலைகளை எடுத்து நரம்பு இசையாத வெற்றிடங்களுக்குக் கோடிட்டுத் தருவாம்.

சிங்கத்தில் மேற்செம்பாலை, துலாத் திற் செம்பாலை, தனுவில் படுமலைப்பாலை, கும்பத்திற் செவ்வழிப்பாலை, மீனத்தில் அரும்பாலை, இடபத்திற் கோடிப்பாலை, கற்கடகத்தில் விளரிப்பாலை தோன்றுதல் காண்க. கருவியிலே இவற்றை இசைக்கும் போது தொடாத நரம்புகள் வெற்றிட மாக நின்றன.

## பாலைத்திரிபு

| | |
|---|---|
| சிங்கம் | 0 — 4 — 8 — 12 13 — 17 — 21 22 |
| துலாம் | 0 — 4 — 8 9 — 13 — 17 18 — 22 |
| தனு | 0 — 4 5 — 9 — 13 14 — 18 — 22 |
| கும்பம் | 0 1 — 5 — 9 10 — 14 — 18 — 22 |
| மீனம் | 0 — 4 — 8 9 — 13 — 17 — 21 22 |
| இடபம் | 0 — 4 5 — 9 — 13 — 17 18 — 22 |
| கற்கடகம் | 0 1 — 5 — 9 — 13 14 — 18 — 22 |

இனி இளிக்கிரமமென்னும் ஷட்ஜக் கிராமத்தினை ஆராய்வாம். விளரி, கைக்கிளை இடம் வேறுபடாது நிற்க ஏனைய ஐந்தும் ஒரு வீடுதள்ளி நிற்கப் பெறுவது இளிக்கிரமம். இதனை இக்காலத்துக் குறியீட்டெழுத்துக்களாற் காட்டுவாம்

| மே | இ | மி | கற் | சி | க | து | வி | த | ம | கு | மீ |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 3 | 1 | 3 | 1 | 1 | 3 | 1 | 3 | 1 | 3 | 1 |
| நி | | ச | ரி | | க | | ம | | ப | த | |

ஷட்ஜம் இடபமிதுனங்களுக்குரிய 4 அலகு பெறுகின்றது. ரிஷபம் கற்கடகத்திற் குரிய 3 அலகு, காந்தாரம் சிங்கம் கன்னிக்குரிய 2 அலகு, மத்திமம் துலாம் விருச்சிகத்திற்குரிய 4 அலகு, பஞ்சமம் தனுமகரத்திற்குரிய 4 அலகு, தைவதம் கும்பத்திற்குரிய 3 அலகு, நிஷாதம் மீனம் மேடத்திற்குரிய 2 அலகு பெற்று நின்றன.

குரன் முதலேழும் ம-ப-த-நி-ச-ரி-க ஆதலின் அவை பெறும் அலகுகள் முறையே 4-4-3-2-4-3-2 ஆம்.

அங்ஙனமாதலின்,

'குரல்துத்த நான்கு கிளைமூன் றிரண்டாங்
குறையா உழைஇளி நான்கு—விரையா,
விளரியெனின் மூன்றிரண்டு தாரமெனச் சொன்னார்
களரிசேர் கண்ணுற் றவர்'

என்னும் உரைச்சூத்திரம் இளிக்கிரமத்திலே ஏழு நரம்புகளும் பெறும் அலகினைக் கூறிற்று.

வடநூலார் இளிக்கிரமமாகிய ஷட்ஜக் கிராமத்திற்கு ஏழு மூர்ச்சனைகள் (பாலைகள்) வகுத்தார்கள். அவர் வகுத்த வற்றைத் தந்து அவை பன்னிருபாலையுள் நிற்கும் மரபினையுங் காட்டுவாம்.

| மூர்ச்சனைகள் | அலகெண்கள் | | | | | | | பன்னிருபாலை இராசிவீடுகள் |
|---|---|---|---|---|---|---|---|---|
| அபிருத்கதா | 3 | 2 | 4 | 4 | 3 | 2 | 4 | மிதுனம் |
| அஸ்வகிராந்தா | 2 | 4 | 4 | 3 | 2 | 4 | 3 | கற்கடகம் |
| மத்சரீகிருதா | 4 | 4 | 3 | 2 | 4 | 3 | 2 | கன்னி |
| சுத்தஷட்ஜா | 4 | 3 | 2 | 4 | 3 | 2 | 4 | விருச்சிகம் |
| உத்தராயதா | 3 | 2 | 4 | 3 | 2 | 4 | 4 | மகரம் |
| ரஞ்ஜநி | 2 | 4 | 3 | 2 | 4 | 4 | 3 | கும்பம் |
| உத்தரமந்திரா | 4 | 3 | 2 | 4 | 4 | 3 | 2 | மேடம் |

அலகெண்களை ஒன்றின்பின் னொன்றாகக் கூட்டி யெழுத அலகுநிலை யெண்கள் கிடைப்பன. முன்போலவே பன்னிரண்டு ஸ்வரஸ்தானங்களில் இவை நிற்குமிடங்களைக் காட்டி வெற்றிடங்களுக்குக் கோடிடுவாம்.

| | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| மிதுனம் | 0 | 3 | — | 5 | — | 9 | — | 13 | 16 | — | 18 | — | 22 |
| கற்கடகம் | 0 | — | 2 | — | 6 | — | 10 | 13 | — | 15 | — | 19 | 22 |
| கன்னி | 0 | — | 4 | — | 8 | 11 | — | 13 | — | 17 | 20 | — | 22 |
| விருச்சிகம் | 0 | — | 4 | 7 | — | 9 | — | 13 | 16 | — | 18 | — | 22 |
| மகரம் | 0 | 3 | — | 5 | — | 9 | 12 | — | 14 | — | 18 | — | 22 |
| கும்பம் | 0 | — | 2 | — | 6 | 9 | — | 11 | — | 15 | — | 19 | 22 |
| மேடம் | 0 | — | 4 | 7 | — | 9 | — | 13 | — | 17 | 20 | — | 22 |

இளிக்கிரமத்தின் முதலில் நின்ற மிதுனப்பாலையிலே வரும் பன்னிரு அலகுநிலை யெண்களையும் அவை தமக்கு இக்காலத்திலே வழங்கும் பெயர்களையுந் தருவாம்.

- 0,22 ஷட்ஜம்
- 3 சுத்தரிஷபம்
- 4 சதுசுருதிரிஷபம்
- 5 சாதாரணகாந்தாரம்
- 8 அந்தரகாந்தாரம்
- 9 சுத்தமத்திமம்
- 12 பிரதிமத்திமம்
- 13 பஞ்சமம்
- 16 சுத்ததைவதம்
- 17 சதுசுருதிதைவதம்
- 18 கைசிகி நிஷாதம்
- 21 காகலி நிஷாதம்

ஷட்ஜம் முதலாக உரிய இடங்களில் ஏழு ஸ்வரங்களை யெடுக்க அபிருத்கதா வாகும். இப்பரிசே சுத்தரிஷபம் முதலாக அஸ்வகிராந்தா, சாதாரண காந்தாரம் முதலாக மத்சரீகிருதா, சுத்தமத்திமம் முதலாகச் சுத்த ஷட்ஜா, பஞ்சமம் முதலாக உத்தராயதா, சுத்ததைவதம் முதலாக ரஞ்ஜநி, கைசிகி நிஷாதம் முதலாக உத்தர மந்திரா பிறப்பன.

துத்தம் விளரி கைக்கிளை (ப ரி த) இடம் வேறுபடாது நிற்க ஏனைய நான்கும் ஒருவீடுதள்ளி நிற்பது குரற் கிரமமாகிய மத்திமக் கிராமமாம். இராசிவீடுகளிலே இக்காலத்துக் குறியீட்டெழுத்துக்களாக வைத்து மத்திமக் கிராமத்தைத் தருவாம்.

| மே | இ | மி | கற் | சி | கன் | து | வி | த | ம | கு | மீ |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 3 | 1 | 3 | 1 | 1 | 3 | 1 | 3 | 1 | 3 | 1 |
| நி | | ச | ரி | | க | | ப | ப | | த | |

இக்கிராமத்திலே பஞ்சமம் மூன்று அலகும், தைவதம் நான்கு அலகும் பெறுதலையும் ஏனைய இளிக்கிரமத்திற் போலவே அலகு பெற்று நிற்றலையும் நோக்குக.

அங்ஙனமாதலின் ம-ப-த-நி-ச-ரி-க என்னும் ஏழும் 4-3-4-2-4-3-2 என அலகு பெற்று நின்றன.

இதன் மூர்ச்சனைகள் வருமாறு :—

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| ஹ்ருஷ்யகா | 3 | 4 | 2 | 4 | 3 | 2 | 4 | விருச்சிகம் |
| பௌரகி | 4 | 2 | 4 | 3 | 2 | 4 | 3 | தனு |
| மாதலி | 2 | 4 | 3 | 2 | 4 | 3 | 4 | கும்பம் |
| சுத்தமத்தியா | 4 | 3 | 2 | 4 | 3 | 4 | 2 | மேடம் |
| கல்லோபநதா | 3 | 2 | 4 | 3 | 4 | 2 | 4 | மிதுனம் |
| ஹரிணாஸ்வா | 2 | 4 | 3 | 4 | 2 | 4 | 3 | கற்கடகம் |
| சம்வீரீ | 4 | 3 | 4 | 2 | 4 | 3 | 2 | கன்னி |

| | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| விருச்சிகம் | 0 | 3 | — | 7 | — | 9 | — | 13 | 16 | — | 18 | — | 22 |
| தனு | 0 | — | 4 | — | 6 | — | 10 | 13 | — | 15 | — | 19 | 22 |
| கும்பம் | 0 | — | 2 | — | 6 | 9 | — | 11 | — | 15 | 18 | — | 22 |
| மேடம் | 0 | — | 4 | 7 | — | 9 | — | 13 | 16 | — | 20 | — | 22 |
| மிதுனம் | 0 | 3 | — | 5 | — | 9 | 12 | — | 16 | — | 18 | — | 22 |
| கற்கடகம் | 0 | — | 2 | — | 6 | 9 | — | 13 | — | 15 | — | 19 | 22 |
| கன்னி | 0 | — | 4 | 7 | — | 11 | — | 13 | — | 17 | 20 | — | 22 |

[ஷட்ஜக்கிராம, மத்தியமக்கிராம மூர்ச்சனைகளின் பெயர்கள் நாரதர் சங்கீத மகரந்தத்தினின்று எடுக்கப்பட்டன. பிறநூல்களிலே சில வேறுபாடுகள் உள.]

'பன்னிருபாலையினுருத் தொண்ணூற்றொன்றும் பன்னிரண்டும்' என்பவற்றுள் மூன்று கிராமங்களுக்குமுரிய இருபத்தொரு மூர்ச்சனைகள் இருபத்தொரு உருக்களாம். இவையாவும் ஏழு நரம்பு உடைய. ஆறு நரம்புகளால் வருகிற பண்ணியலை வடநூலார் ஷாடவம் என்ப. ஐந்து நரம்புகளால் வரும் திறத்தினை வடநூலார் ஔடவமென்ப. நாரதர் சங்கீதமகரந்தத்துட் குறித்தசில சம்பூர்ண ஷாடவ ஔடவராகங்களையும் அவை தமக்கு முதலிலெடுக்கும் நரம்பு வாராத நரம்புகளையும் குறிப்பிடுவாம்.

பண் (சம்பூர்ணராகம்)

| | |
|---|---|
| தேசாக்ஷி | ம-முதல் |
| வசந்தபைரவி | ,, ,, |
| சுத்தபைரவி | ,, ,, |
| மாலவீ | க-முதல் |
| நாட | ச-முதல் |
| முகஹாரி | த-முதல் |
| சாஹரி | ம-முதல் |
| பலஹம்ச | க-முதல் |
| வசந்த | ச-முதல் |
| ராமக்கிரியா | ,, ,, |
| வராடிகா | ,, ,, |

(தொடரும்)

# குவளாலபுரம் சீயகங்கனும் சனகைப் பவணநந்தி முனிவரும்

(கி. பி. 1205—1212)

## ஓர் ஆராய்ச்சி.

கோவை. திரு. சி. கு. நாராயணசாமி முதலியார்.

(முற்றொடர்ச்சி; துணர் ஙஎ, மலர் 8, பக்கம் 224)

### நாடுகள்

கங்கவரசர்கள் அரசுசெய்த நாட்டுக்குக் கொங்குநாடென்றும், கருநடமென்றும், எருமைநாடென்றும், மைசூர்நாடென்றும், கங்கைவாடி தொண்ணூறாறுயிரம் என்றும், பெயர்கள் வழங்கப் பெற்றுவந்தன. கங்கைவாடி தொண்ணூறாறுயிரம் என்பதற்கு= தொண்ணூறாறுயிரம் கிராமங்கள் சேர்ந்த நாடென்பது பொருள். கோலாரும், நந்திகிரி எனும் நந்திதுர்க்கமும் அவர்களது பழைமை நகரங்களாயிருந்தன. இக் கங்கவாடி வட ஆறுகாடு சில்லாவிலுள்ள பாலாற்றின் வடகரைப் பகுதியும், மைசூர் நாட்டிலுள்ள கோலார் சில்லாவின் ஒரு பகுதியும் கூடிய பெரும்பாணப் பாடிக்கு மேற்பாலுள்ள நிலப்பரப்பு.

இவையேயன்றி, முன்னர்க் கூறப்பட்ட தலைக்காடு, காந்தபுரம், முகுந்தபட்டினம் (சீரங்கபட்டினம்) முதலிய பட்டினங்களும், கங்க அரசர்களுக்கு இராசமாநகரங்களாக விருந்தன. எட்டாம் நூற்றாண்டுக்குப் பின்னரே நெலமங்கலம் தாலூகாவிலுள்ள 'மன்னே' (மண்ணேயும்) என்ற பட்டினம் கங்கர்களுக்கு இராசமா நகரமாய் விளங்கியிருந்தது.

### விருதுகள்

கொங்கிணிவர்மன், தர்மமகாராசாதிராசன், சத்தியவாக்கியன், நீதி வாக்கியன், சிரீபுருடன், பீமகோபன், லோகதூர்த்தன், இராசகேசரி, முதலிய பெயர்களே, இவ் அரசர்களது விருதுப்பெயர்களென நூல்களிலும், சேப்பேடுகளிலும் வரையப் பட்டுள்ளன.

'சத்தியவாக்கியன்,' 'நீதிவாக்கியன்' என்ற பெயர்களைத் தந்தையும், மகனும் ஒருவர்பின் ஒருவர், மாறிமாறிப் புனைந்து கொண்டிருந்தனர். இது, சோழர்கள் தங்களுள் ஒருவர்பின் ஒருவர் அரசுரிமை பெறும்போது தங்களுள் 'இராசகேசரி,' 'பரகேசரி' என்று பட்டப் பெயர்களைச் சூட்டிக்கொள்ளுவது போன்றதாம்.

கங்கவரசர்களின் ஆளுகை, கொண்டு நடத்தல், நெறி, வலிமை, போர், பேராண்மை ஆகியவைகளை, மேனாட்டு ஆங்கிலப் புலவர்கள், தங்கள் ஆராய்வு நூல்களிற் பெரிதும் புகழ்ந்து பேசியிருக்கின்றனர். அவர்கள் தாலமி, வர்ஜில், வெலரியஸ், பிளாக்ஸ், பிளினி என்னும் பெயரினர்கள்.

இனி, இவ்வரசர் குடியில், இறுதியினும் இறுதியாகத் தோன்றித் தமிழ் வளர்த்தும் புகழ் பெருக்கியும், பெருமை சிறந்தும், மேம்படத் திகழ்ந்தவனே சீயகங்கப் பெயரினன். இவனது செய்தி இதுவரை அறிந்தவற்றுடன், யான் கண்டவற்றையும் உடன் கூட்டி வெளியிடுகிறேன்.

# குவளாலபுரம் சீயகங்கனும்—சனகைப் பவணநந்தி முனிவரும்

செந்தமிழறிவும், சீரியநலனும், ஈந்துவக்கும் இனிய குணமும், பாடும் புலவர்களிடத்துப் பற்றும், பரந்த நோக்கமுமுடைய இச் சீயகங்கன், தொன்மையும், புகழும், அறிவும் ஆண்மையும் நிரம்பிய கங்கர் மரபில், அம்மரபு விளங்கத் தோன்றிய பெருவீரனவன். கங்கமரபினர் பேராண்மை விளங்கியிருந்த பெரு வீரரென்பது—

" நன்னனேற்றை நறும்பூணத்தி
துன்னருங் கடுந்திறற் கங்கன் கட்டி."

என்று 'அகநானூறு' 44-ஆம் செய்யுளும்;

" பங்களர் கங்கர் பல்வேற் கட்டியர் "

என்று சிலப்பதிகார அடியும் ;

" கங்கரிவ ரைய ! கரு நாடரிவ ரைய !

என்று பரஞ்சோதி முனிவர் திருவிளையாடற் புராணம், மெய்க்காட்டிட்டபடலம் 30-ஆம் செய்யுளும் சிறப்பித்துக் கூறுவனவற்றால் தெளிவாம்.

'துன்னருங் கடுந்திறற் கங்கன்' என இவன் முன்னோன் ஒருவனும், 'அமராபரணன்' என இவனும் விதந்து கூறப் பெற்றிருத்தலை நோக்குமிடத்து, இக்குடியிற் பிறந்தாருடைய வீரச்சிறப்பு, நன்கு விளங்கலாகும்.

'கங்கம்' என்பது நாட்டின் பெயராகவும் வழங்கப்படுகிறது. கங்கராச்சியத்தை முதன் முதல் தோற்றுவித்தவர், சைனமதப் பெரியார்களுள் ஒருவரான சிம்மநந்தி குரவரென்றும் ; கங்கபரம்பரையினர் பலர் சைன மதத்தைத் தழுவி யொழுகினரென்றும் ஆராய்ச்சியாளர்கள் அறிந்துரைக்கின்றனர்.

கங்கவரசர்கள் கி. பி. பதினோராம் நூற்றாண்டின் தொடக்கத்தில் தமது ஆண்மை குன்றிச் சோழவரசர்கள் ஆட்சிக்கு அடங்கிய பின்னர், அவர்கள், பலவாறாகப் பிரிந்து பலவிடங்களில் குறுநில மன்னர்களாகவும், படைத்தலைவர்களாகவும் நிலையேற்றிருந்தனர். கி.பி. 1178-ஆம் ஆண்டு முதல் 1216-ஆம் ஆண்டுவரை சோழநாட்டின் அரியாசனத்தின் உரிமை கொண்டிருந்த மூன்றாம் குலோத்துங்க சோழன், கொங்கு நாட்டின் மீது படையெடுத்து அந்நாட்டை வென்று தனது தலைமைக்கீழ் ஆக்குதற்கு முன், அஃதாவது கி. பி பதினோராம் நூற்றாண்டின் இடைக்காலத்தில் நமது சீயகங்கன் மைசூர் நாட்டின் *குவளாலபுரம் அல்லது கோலாகலபுரத்தில் தனி உரிமையில் அரசு செய்து கொண்டிருந்தான். இவ்வுண்மை, இவன், 'குவளாலபுர பரமேசுரன்' என்று தனது மெய்க்கீர்த்தியில் பாராட்டிக் கூறியிருத்தலால் தெளிவாம். இவ்விருதுப்பெயரேயன்றி இவனுக்குத் திருவேகம்பமுடையான் அருங்கலை விநோதன், உத்தமசோழகங்கன், சூரநாயகன், வீரகங்கன், வெட்டும் அமராபரணன் என்ற பெயர்களும் வழங்கியிருந்தன என்று மூன்றாங் குலோத்துங்க

---

*இது, சோலார்ப் பேட்டையிலிருந்து பெங்களூருக்குச் செல்லும் S. M. R. ரயில் வழியிலுளது. 'கோலார்' (Kolar) என்று இப்பொழுது வழங்கப்படுகிறது. இப்பேரூரில் 'சதஸ்யங்கமலை' நந்திதுர்க்கம், (துர்க்கம் = மலைமேற்கோட்டை) என்னும் மலைகள், புகழ் பரவியவை. 'உத்தரவாகினி,' 'தட்சணவாகினி,' 'ஆர்க்காவதி' 'பாபவ்ஷ்ணி,' 'பாலாறு,' என்ற ஆறுகளும், மலைமீது 'அமிர்தசரோவரம்' எனப் பெயரிய திருக்குளமும் இருக்கின்றன. இவ்வூரின் பொற் சுரங்கம் உலகெங்கும் அறியப்பட்டது. இக்கோலார், 3,178 சதுர மைல் பரப்பையும், 7,80,000 மக்கள் எண்ணிக்கையும் கொண்டதோர் பேரூர்.

சோழ தேவனுடைய ஆட்சியின் 27-ஆம் ஆண்டுக் கல்வெட்டிலும்; (M E R. 186-7) (ibid) 562—3 of 1906) ஆகியவற்றிலும் காணப்படுகின்றன.

அமராபரண சீயகங்கன் குவளாலபுரத்தில் தனித்த உரிமையில் அரசு செய்து கொண்டிருந்தான் என்பதற்கு,

" ... ... ... தன்னுர்
இகலற நூறியிருகில முழுவதுந்
தனதெனக் கோலித் தன்மத வாரணந்
திசைதொறு நிறுவிய திறலுறு தொல் சீர்க்
கருங்கழல் வெண்குடைக் கார் நிகர் வண்கைத்
திருந்திய செங்கோற் சீய கங்கன் "

என்றுள்ள நன்னூற் சிறப்புப்பாயிரம், ஒரு சான்றும்

இங்ஙனம் மூன்ருங்குலோத்துங்க சோழதேவன் தனது 23, 24-ஆம் ஆண்டில் அஃதாவது கி. பி. 1202-ஆம் ஆண்டில் கொங்குநாட்டின் மீது படையெடுத்துப் போர்புரிந்து நாட்டை வென்று தனதாக்கிக் கொண்டான். இதன் பின்னரே அமராபரணுகிய சீயகங்கனும், அவனுடன் ஒருபுடையொத்த நல்லசித்தி அல்லது தர்மசித்தி யெனும் அரசனும்; 'செங்கோணிமைந்தன்' எனும் அத்திமல்ல சம்புவராயனும், அவனைச் சார்ந்தவர்களும்; தர்மபுரி, விடுகாதழகிய பெருமாளும், வேங்கி வல்லபன் திருக்காளத்தி தேவனும், அவன் மகன், நரசிங்கதேவனும், ஆகியவர்கள், குலோத்துங்க சோழதேவனுடைய பெரும் படைக்குத் தலைமையாளர்களாய் அமர்ந்திருந்தனர். இங்ஙனம் சேனைத்தலைவர்களாயமர்ந்த அவர்கள் தங்கள் அரசர்பிரானது நாட்டின் பாதுகாப்புக்காக ஆங்காங்கு சிறு படைகளை வைத்துக் கொண்டு. காவல் காப்பதற்குத் தேர்ந்து கொண்ட எல்லைத் தலங்கள் பின்வருவன: தெலுங்கு சோழச் சிற்றரசன், தர்மசித்தி, நெல்லூரெனும் விக்கிரமசோழபுரம்; செங்கோணிமைந்த அத்திமல்ல சம்புவராயன், அண்ணுமலையும், அதனைச்சார்ந்த இடமும்; விடுகாதழகிய பெருமாள், சேலத்துத் தகடூர்; வேங்கிவல்லப காளத்தி தேவன் திருக்காளத்தி. அமராபரண சீயகங்கன் வடஆறுகாடு பாலாற்றுப் பக்கத்துப் பகுதிகள் முதலியன. அப்படைத் தலைவர்கள், தங்கள் தலைமை அரசன் மூன்ரும் குலோத்துங்க சோழன் படைத் துணை விரும்பும் போது உடனுக வந்து உதவுவதாகவும் உறுதிமொழி கொடுத்திருந்தார்கள்.

ஆண்மையும், அஞ்சா நெஞ்சமும், படைப்பலமும் போர்ப்பயிற்சியும் மிகுந்த அச்சேனைத்தலைவர்கள், தங்கள் அரசனது காவலர்களாகவிருந்த காரணத்தால், வேற்றரசர் யாரும் குலோத்துங்கனுடைய நாட்டின்மீது படையெடுக்க அஞ்சியிருந்தனர்.

இங்ஙனம், பகையரசர் படையெடுக்க அஞ்சுமாறு பலமும், படைகளுமிக்குடைய சோழவேந்தனைப்பற்றிக் கல்வெட்டு வாயிலாக அறியப்படுவனவற்றைத் தழுவிக் கொள்ளுதல் நேர்மையாம்.

" சீயகங்கன் இராசமாதேவியாகிய அமராபரண சீயகங்க நம்பிராட்டி அரிய பிள்ளை " என்பவள், சிவபிரானிடத்துக் கொண்ட அன்பினுல் வட ஆறுகாடுசில்லா அரக்குன்றத்துக்கு அண்மையிலுள்ள திருவல்லம் எனும் சிவதலத்தில் கோயில் கொண்டுறையும் நாயனர்க்குத் திருவிளக் கொன்றும்; நாச்சியார்க்கொன்றும் ஆக இரண்டு விளக்குகள் ஏற்றிவைத்ததாகக்

கல்லெழுத்துக் கூறுகிறது. (S. I. I. Vol. III Part I Page 122, 123)

ரேணுகுண்டாவுக்குப் பக்கத்துள்ள திருக்காளத்திச் சிவாலயத்தின் இரண்டாம் திருச்சுற்றுத் திருமதிலில் திரிபுவனசக்கர வர்த்தி திரிபுவன வீரதேவனுன அச் சோழனது அதே ஆண்டு ஆட்சியில்,

"உடையார் திருக்காளத்தியுடையார்க்குக் குவளாலபுர பரமேச்சுரன் கங்ககுலோத்தமன் சூரநாயகன், திருவேகம்பமுடையானுன அமராபரணன் சீயகங்கன் (ibid 116 of 1912) திருவிளக்கொன்று வைத்தான் என்று ஒரு கல்லெழுத்தும்; இக் கங்கன் மகளொருத்தி, அறஞ்செய்தாள் எனவேறு கல்லெழுத்தும் கூறுகின்றன. மற்றும், புங்கனூர்த்தாலூகா அகத்திய கொண்டாச் சிவாலயத்தில், அச் சோழன் கால்த்தவாகிய கல்லெழுத்துக்களால் இச் சீயகங்கனுக்குச் சூரநாயகன், முதலிய பல பெயர்கள் வழங்கப்பட்டன வென்றும் அறியப்படுகிறது. இவற்ருல், குவளாலபுரத்தை (கோலாரை)த் தலைமை நகராகக் கொண்டு அரசு செய்த கங்கர் வழியினனுன அமராபரணன் சீயகங்கன் என்பான். சோழசக்கரவர்த்திக்குக் கீழ்ப் பட்டிருந்தவன் என்பதும்; அரியபிள்ளை என்ற மனைவியை உடையவன் என்பதும், திருவேகம்பமுடையான் என்ற இயற் பெயரும், சூரநாயகன் முதலிய சிறப்புப் பெயர்களும் உடையவன் என்பதும்; தெரிய வருகின்றன. மூன்ருங் குலோத்துங்கன் மூன்ரும் ஆட்சியாண்டு முதல் முப்பத்து நான்காம் ஆண்டுவரை இச்சீயகங்கன் வாழ்ந்தவன் என்று தோற்றுகின்ருன். (M. E. R) 432 of 1929-9) இவன் முன்னேர்களும் சோழர்கள் கீழ் அடங்கி யிருந்தவர்களே. இன்னேர் கங்கவரசராயினும், கொங்குநாட்டையடுத்த கோலார் நிலப்பரப்பை அரசுசெய்த தமிழ் வேந்தர்களென்பது இவ்வரசனதும் இவ்வரசியதுமான இயற் பெயர்களால் நன்கு விளங்கும். தமிழகத்தில் இவனும், இவன் மனைவியும் அறஞ்செய்திருந்தார்கள் என்பதும், எடுத்துக் காட்டிய கல்லெழுத்துக்களால் விளங்குகின்றது. அன்றியும், கொங்குநாட்டுள்ள 'சீனபுரம்' என வழங்கும் சனகையில் வாழ்ந்த பவணநந்தி முனிவரைக் கொண்டு சீயகங்கன் நன்னூலை இயற்றுவித்தற்கு மேற்காட்டிய தமிழ்த்தொடர்பே காரணம் என்க. திருக்காளத்தி நிலப்பரப்பை அரசு செய்த 'மதுராந்தகப் பொத்தப்பிச் சோழன்' என்பான், இச் சீயகங்கனுடைய மாமன் ஆவன். தமிழ் எல்லையில் வாழ்ந்த இவனும் சோழர்கீழ்ச் சிற்றரசனே. தன் மருகனைப் போலவே, இப்பொத்தப்பிச் சோழனும் தமிழ்ப்பற்றுடையவன். இவ்வாறு தமிழருமை அறிந்தவனுய்த் தக்கார் ஒருவரைக் கொண்டு பிற்காலத்துத் தமிழ் மக்கள் கொண்டாடும்படி அரிய இலக்கண நூலை இயற்றிப் புகழ் படைத்த இச்சீயகங்கன் செய்திகள் கல்வெட்டுவாயிலாகச் சிறிதளவேனுந் தெரியக் கூடியதாயிருத்தல் அறிந்து போற்றத்தக்கது."

இச்சிறு பகுதி, "சாசனத் தமிழ்க் கவி சரிதம்" என்னும் நூலிலிருந்து தேவைக் கேற்றளவு எடுத்துக்கொள்ளப் பட்டது.

சீயகங்கன் வரலாறு இதுவாக, இனி, நன்னூல் யாத்த பவணநந்தி முனிவரைப் பற்றி யானறிந்ததைக் கூறி இக்கட்டுரையை முடிக்கின்றேன்.

(தொடரும்)

# திருவாய் மொழி விளக்கம் !

A. பூவராகம்பிள்ளை, தமிழ் விரிவுரையாளர், அண்ணுமலைப்பல்கலைக் கழகம்.

(4—10—41-ல் திருச்சிராப்பள்ளி, வானெலியிற் பேசப்பட்டது)

**வை**ணவ சமயத்தவரால் தெய்வத் தன்மை வாய்ந்த சிறந்த பத்தி நூலாகக் கொண்டாடப் பெற்று வருவது நாலாயிரத்திவ்வியப் பிரபந்தம் என்னும் தொகை நூலாகும். இதன் கண் உள்ள நூல்களை அருளிச் செய்தவர்கள் பொய்கையாழ்வார் முதல் திருமங்கை யாழ்வார் இறுதியாக உள்ள ஆழ்வார்கள் பன்னிருவராவர். இவர்களுள் வரிசையில் ஐந்தாமவராக வைத்து எண்ணப்படுபவர் நம்மாழ்வார். ஆயினும் பெருமையால் மற்றெல்லோரினும் தலைமை பெற்றவராவர். இவர் வரலாறு குருபரம்பரை என்னும் நூலிற் காணலாம்.

இவர் அருளிச் செய்த நூல்கள் திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி என நான்காகும். இவற்றுள் திருவாய் மொழியே மிகச் சிறப்புடையதாகும். வாய்மொழி என்பது வேதம் என்னும் பொருளில் பரிபாடல் என்னும் பண்டைத் தமிழிலக்கியத்தில் வந்துள்ளது. எனவே திருவாய் மொழி என்பதற்குச் சிறந்த வேதம் என்பது பொருளாகும்.

நம்மாழ்வாருடைய நூல்களை அவர் காலந்தொட்டே பலரும் பலவகையாகப் பாராட்டி வந்துள்ளனர். அவற்றுள் திருவாய் மொழியை மிகச் சிறப்பாகப் பாராட்டியுள்ளனர். இவருடைய மாணவராகிய மதுரகவி என்பார் இவரையே தெய்வமாக வணங்கி இவரைப் போற்றிக் 'கண்ணிநுண் சிறுத்தாம்பு' என்னும் (பதினெருபாக்களாலாகிய) ஒரு நூல் இயற்றியுள்ளார். அதன்கண்

'மிக்க வேதியர் வேதத்தின் உட்பொருள்
நிற்கப் பாடி என் நெஞ்சுள் நிறுத்தினுன்"

என, அறிதற்கரிய வேதத்தின் சாரமான கருத்துக்களை இனிய திருவாய் மொழியாகப் பாடி என் நெஞ்சுள் நிலைத்து நிற்குமாறு செய்தனன் என்றுர். என் நெஞ்சுள் என்றுராயினும் கற்போர் எல்லோருடைய நெஞ்சினுள்ளும் நிற்கப் பாடினன் என்பதே கருத்தாகும். மற்றொருபாவில்

'தேவுமற்றறியேன் குருகூர் நம்பி
பாவின் இன்னிசை பாடித் திரிவனே'

என, நான் நம்மாழ்வாரைத் தவிர வேறு தெய்வம் உண்டு என்று கருதேன். அவருடைய இன்னிசை பொருந்திய திருவாய் மொழியைப் பாடிக்கொண்டிருப்பதே நான் அடையும் பெரும் பேருகும் என்றனர். இவர் மதுரகவியாழ்வார் என்ற பெயரோடு ஆழ்வார்களுள் ஒருவராக வைத்துப் போற்றப்படுகின்றனர்; இவர் நூல் நாலாயிரப்பிரபந்தத்தில் சேர்க்கப்பெற்று ஓதப்படுகின்றது என்றுல், நம்மாழ்வாரின் பெருமையையும், திருவாய் மொழியின் பெருமையையும் எங்ஙனம் அளவிட்டுரைத்தல் கூடும். மற்றும் அழகிய மணவாளப் பெருமாள் நாயனுர் என்பவர் நம்மாழ்வார் பெருமையையும், திருவாய் மொழியின் பெருமையையும், அதன் கருத்துக்களையும் விளக்கி 'ஆச்சார்யஹ்ருதயம்' என்ற ஒரு வசன நூல் இயற்றியுள்ளனர். கவிச்சக்கிரவர்த்தியாகிய கம்பர் 'சடகோப

79

ரந்தாதி' என்றொரு நூல் பாடியுள்ளார். இங்ஙனமான நூல்கள் இன்னும் பல உள.

இனி, நம்மாழ்வார் இத்திருவாய்மொழியையும் பிறவற்றையும் எங்ஙனம் பாடினர் எனப் பார்ப்போம். பிறப்பில் பல்பிறவிப் பெருமானாகிய திருமால் பேரருளால் அவர்பாற் சென்ற அன்பு ஆழ்வாருக்கு அளவு கடந்து பெருகவே, உள்ளடங்காத அவ்வன்பின் பெருக்குப் பாக்களின் வடிவமாக வெளிவரலாயிற்று. இதனை அவர் பாசுரங்கொண்டே அறியலாம்.

"கண்டுகொண்டென் கண்ணிணையாரக்களித்துப்
பண்டை வினையாயின பற்றோடறுத்துத்
தொண்டர்க்கமுதுண்ணச் சொன்மாலைகள்
சொன்னேன்"

என்ற இப்பாசுரப் பகுதியில் எம் பெருமானைக்கண்டு உள்ளங்களித்தேன்; அக்களிப்பின் மிகுதியால் இச்சொன் மாலைகளைச் சொன்னேன்; என் வினைகளும் முற்றும் ஒழிந்தன என்றார். எம் பெருமானைக் கண்டு களித்த ஆர்வமிகுதியாற் றோன்றிய பாசுரங்களாதலின், அவை தமக்கு இன்பமளித்தல் போலவே, மற்றைய அடியார்களுக்கும் இன்பமளிக்கும் என்னும் நினைவால் தொண்டர்கள் செவியால் நுகரும் அமுதெனக் கொண்டு இன்புறும் பாமாலைகள் என்றார். மற்றோரிடத்தில்—

"எண்ணம் புகுந்து தித்திக்கும் அமுதே
இமையோரதிபதியே"

என்றார். தேவரமுதம் உண்ணும்போது நாவிற்கினிமை தரும். கடவுளாகிய என் அமுதம் நினைக்கும் நினைப்பிற் சென்று இன்ப மூட்டுகின்றதென்றார். நினைவு இன்பமயமானால், அந்நினைவின் மேலெழும் சொன்மாலை இன்பமுடையதாதலும், அச் சொன்மாலை அவர்க்கு இனிதாதல் போன்று ஏனை அடியார்க்கும் இனிதாதலும் இயல்பேயாகும்.

யான் என்னும் அகப்பற்றும் எனது என்னும் புறப்பற்றும் அற்ற அடியார்கள், தம்மிடத்து நிகழும் செயல்களனைத்தும், தம்முயற்சியால் நிகழ்வன என்றெண்ணாது எல்லாம் இறைவன் எண்ணப்படி நிகழ்கின்றன என்று எண்ணுவது இயல்பு. அங்ஙனமே நம்மாழ்வார் இருவகைப் பற்றும் சிறிதும் இல்லாமல் உள்ளந் தூயராய்த், திருமாலைப் பற்றிய நினைவும் சொல்லுமே தமக்கு உண்ணுஞ் சோறு, பருகும்நீர், தின்னும் வெற்றிலையாகிய தாரக, போஷக, போக்கியங்கள் என்றிருக்கும் பேரியல்புடையராதலின், திருமாலே என் உள்ளத்திருந்து இப் பாசுரங்களைப் பாடும்படி செய்தார்; அஃதாவது அவரே என் உள்ளத்திருந்து இவற்றைப்பாடினார் என்றுபல பாசுரங்களில் வெளியிட்டுள்ளார். "என்றைக்கும் என்னை உயக் கொண்டு போகிய" என்ற பதிகத்தில் ஒவ்வொரு பாசுரத்திலும் இக் கருத்தை வெளியிட்டுள்ளார்.

"என் சொல்லி நிற்பன் என் இன்னுயிரின்
ஒன்றாய்
என் சொல்லால் யான் சொன்ன இன்கவி
என்பித்துத்
தன் சொல்லால் தான் தன்னைக்கீர்த்தித்த
மாயன்"

என்பது அப்பதிகத்து ஒரு பாசுரப் பகுதி. என் உயிரில் ஒன்றுபட்டு நின்று, என் சொல்லால் யான் பாடிய இனிய கவிகள் இவை என்று உலகம் எண்ணுமாறு

செய்து, தன் சொல்லால் தன் புகழ்களைத் தானே பாடிக் கொண்ட ஆச்சரியமான குணஞ் செயல்களையுடைய எம் பெருமான் என்றார். இறைவன் எள்ளினுள் நெய் போல் எல்லாப் பொருளிலும் உயிர்க் குயிராய் நின்று அவற்றை இயக்கு கின்றான் என்னும் உண்மையை ஆழ்வார் அநுபவ வாயிலாக நன்கு தெளிந்தவராத லால், அவர் தம் அன்பின் பெருக்காற் பாடியவற்றை இறைவனே உள்ளிருந்து பாடினான் என்று கூறுவது பொருத்தமே யாகும்.

இனி இத்திருவாய் மொழியில் ஆழ்வார் இறைவனைப்பெற்றதாக மகிழ்ந்து பாடிய தன்மை, இன்னும் பெறவில்லையே என்று வருந்திப் பாடிய தன்மை ஆகிய இரு தன்மையும் காணப்படுகின்றன. அதற்குக் காரணம் ஆழ்வாருடைய இரு வகைப்பட்ட மனநிலைகளேயாகும். அவர் இறைவனைத் தம் அகக்கண்ணால்-அதாவது தம் ஞானக்கண்ணாற் காண்பதனால் கண்டு மகிழ்ந்ததாகப் பாடியுள்ளனர். அகக் கண்ணாற் கண்ட அவர்க்கு, இவ்வூனக் கண்ணாலும் காணவேண்டுமென்னும் ஆசை பிறந்து, உடனே அங்ஙனங் காணப் பெறாமையால், பெறவில்லையே என வருந்திப் பாடியுள்ளனர். ஆழ்வாருடைய இந்நிலைகளை அவருடைய பாசுரத்திலே காணலாம்.

“சக்காரத்தண்ணலே யென்று தாழ்ந்து கண்ணீர் ததும்பப்
பக்கம் நோக்கி நின்றலந்தேன் பாவியேன் காண்கின்றிலேன்
மிக்க ஞான மூர்த்தியாய வேதவிளக்கினை யென்
தக்க ஞானக் கண்களாலே கண்டு தழுவுவனே”

மிகவும் வணங்கி அன்பினால் மனங்கசிந்து கண்ணீர் ததும்ப, சக்கரம் ஏந்திய என் தலைவனே என்று கூப்பிட்டேன்; வந்து காட்சி தருவானோ என்றெண்ணி நான் பக்கமும் நோக்கினேன்; காணும் நற்பேறு இல்லாதேனாய் வருந்தினேன்; என்றாலும் ஞான உருவினனாகிய அவனை, வேதமாகிய விளக்கினைக் கொண்டு காணுதற்குரிய அவனை, அவனளித்த ஞானக்கண்களாலே கண்டு தழுவிக் கொள்வேன் என்றார். இதனால் அவர் பெற்று மகிழ்ந்த தன்மை யும் பெறாது வருந்திய தன்மையும் ஒருங்கு வெளியிடப் பட்டிருத்தல் காண்க.

இத்திருவாய்மொழியில் 100 பதிகங் கள் உள்ளன. இதற்கு விரிவாக உரை யிட்டுள்ள பேரியோர்கள், இந்நூறு பதிகங்களின் சுருக்கம் முதற்பதிகம், முதற் பதிகத்தின் சுருக்கம் முதல் மூன்று பாசுரங் கள், அம்மூன்று பாசுரங்களின் சுருக்கம் முதற் பாசுரம், அம் முதற் பாசுரத்தின் சுருக்கம் முதல் அடி என்று முடிவு கட்டி யுள்ளார்கள். அவற்றுள் முதற் பாசுரத்தைக் கவனிப் போம்.

“உயர்வற உயர்நல முடையவன் யவனவன்
மயர்வற மதிநல மருளினன் யவனவன்
அயர்வறு மமரர்கள் அதிபதி யவனவன்
துயரறு சுடரடி தொழுதெழென் மனனே”

என்பது அம் முதற் பாசுரம். இதன்கண் இறைவனுடைய சிறந்த நான்கு தன்மை களை வெளியிட்டு, அத்தகையோனை வணங் குக எனத் தம்மனத்திற்குக் கூறுகின்றார். முதல் அடியில் ஞாயிற்றின்முன் மின்மினி போலப் பிறருடைய உயர்வெல்லாம் இல்லை என்று சொல்லும் வண்ணம் உயர்ந்த நற்குணங்களை உடையவன் என்றார். இதனால், இறைவன் நற்குணங்க ளெல்லாம் உடையவன் என்பதும், பிரமம் நிற்குணப் பொருள் என்பது தமக்கு

உடன்பாடன்று என்பதும் வெளியிட்டா ராவர்.

" முற்குணத்தவரே முத லன்னவர்
நற்குணக் கட லாடுதல் நன்றரோ "

எனக் கம்பர் இறைவனைக் குணக்கடலாகக் கூறினர். தெய்வப்புலமைத் திருவள்ளுவர் சில சிறந்த குணங்களைத் தொகுத்து "எண் குணத்தான்" என்றார். இரண்டாம் அடியில் ஐயந்திரிபின்றிக் கடவுட்டன்மை களையும் பிற பொருள்களின் தன்மைகளை யும் உள்ளவாறு உணரும்படி உண்மை ஞானத்தையும், அதன் பயனாகிய பத்தியை யும் எனக்கருளினன் என்றார். இதனால், தன்னை விரும்புவாரிடத்துத் தான் அவ ரினும் பேரன்புடையனாய் அவர்க்கு வேண்டுவன வெல்லாம் அளிக்கும் இயல் பினன் என்பதை வெளியிட்டார். மூன்றாவது அடியில் சிறந்த ஞானிகளான நித்திய சூரிகளுக்குத் தலைவன் என்றார். இதனால், அவன் தன்னை யடைந்தார்க்கு வீடுபே றளித்தற்குரியவன் என்பதை வெளியிட்டார். 'துயரறு சுடரடி' என் பதனால் அவன் தன் அன்பர்கள் விரும்பிய வடிவோடு காட்சியளிக்கும் இயல்பினன் என்பதை வெளியிட்டார். இறைவனுடைய குணப் பெருமையையும்,அமரர்கள் அதிபதி யாம் அவன் தன்மையையும் கூறிப் பின் தமக்கு ஞானபத்திகள் அருளினமையைக் கூறுவது முறையாகும். ஆயினும், தமக் கருள் புரிந்தது பற்றித் தமக்குண்டான அன்பின் பெருக்கால் இரண்டையும் கூறும் வரையில் தாங்காது குணப் பெருமையைக் கூறியவுடன் தமக்கருள் புரிந்ததைக் கூறினரெனக் கொள்க. 'துயரறுசுடரடி' என்பதற்குத் தன்னை யடைந்தவர்களுடைய பிறவித்துன்பத்தைப் போக்கும் திருவடி என்று முன்னோர் பொருள் கூறினர். ஆனால், இராமாநுசர், தன்னையடைந்தவர் கள் துன்பத்தைப் போக்கி அதனால் தான் துயர் நீங்கும் திருவடி என்றார். இறை வனுக்கு இயல்பில் துயரொன்று மின்றே னும், தன் திருவடியே தஞ்சம் என்றடை யும் ஞானி ஒருவன் கிடைத்தால், அவனைத் தன் பெரும் பேறாகக் கருதும் இறைவ னியல்பைக் கருதி இராமாநுசர் இங்ஙனம் நயம்படப் பொருள் கூறினர். அத்திரு வடிகளைத் தொழுவாயாக என்று ஆழ்வார் தம் மனத்திற்குக் கூறினாராயினும், எல் லோரும் அவன் திருவடிகளைத் தொழுதல் வேண்டும் என்பது கருத்தாகக் கொள்ளு தல் வேண்டும்.

இங்ஙனம் முதற் பாசுரத்தில் இறை வனுக்குக் கூறப்பட்ட குணப் பெருமை, வீடுபேறளிக்கும் உரிமை, அடியார்க் கருளுந்தன்மை, அடியார் பொருட்டு அவன் பல உருவங்களை மேற்கொள்ளுந் தன்மை, அவனடிகளைத் தொழுதல் வேண்டும் என் பது ஆகிய இவைகளே பின்னுள்ள பாசுரங் களெல்லாவற்றிலும் விரிவாகக் கூறப் படுதல் காணலாம்.

நிற்க, இத்திருவாய்மொழியில் ஆழ்வார் கூறிய கருத்துக்களைத் தாம் இறைவனை நேரே பாடியவை, தாம் ஒரு நாயகி நிலையில் நின்று பாடியவை, உல கினரை நோக்கி உபதேசம் செய்யும் முறையிற் பாடியவை என மூன்று வகை யாகப் பிரித்து மற்றொரு முறை யாராய் வோம்.

---

# செப்பமுடையார்க்குச் செய்யும் விண்ணப்பம்-II

திரு, வித்துவான், வே. வேங்கடராசலு ரெட்டியார்,
ஆராய்ச்சியாளர், சென்னைப் பல்கலைக் கழகம், சென்னை

(முற்றொடர்ச்சி: துணர் ஙஎ, மலர் 10, பக்கம் 291)

57: 1. மெய்மயக்கங்களைத் தொல்காப்பியர் கூறிய முறை பிறழாமலே நன்னூலாரும் கூறியுள்ளார்.

2. செய்யுளியலிற் கூறிய ஒற்றளபெடையை நூன்மரபிற் கொணர்ந்து பொருத்தமுயல்வது பெரியதோர் விந்தை.

3. நெட்டெழுத்துக்களின் பின் உயிர்க் குற்றெழுத்து மயங்கி நிற்றற்கு இலக்கணம் இல்லை.

4. அளபெடைகள் இரண்டெழுத்து மயங்கிய மயக்கம் அல்ல; முன்னைய எழுத்தின் ஓசையை மிகுவிப்பதே அளபெடை.

5. அளபெடையில் ஆஅ, கண்ண் என வெவ்வேறு எழுத்தாக எழுதுதற்குக் காரணம் அவற்றிற்குத் தனியெழுத்து இல்லாமையே.

6. மாத்திரை வகையான் அசைகோடலின் உயிரளபெடை நெடிலும் குறிலுமாகப் பிரிக்கப் படுகின்றது. ஒற்றளபெடையில் ஒற்று இரண்டும் பகுக்கப்படுதல் இன்று. ஒற்றளபெடையில் அளபெடை யொற்றுத் தனிப்பட்ட ஓசையினதன்று.

7. அங்ஙனம் முதலிய சொல் வழக்கைக் கருதியே ஆசிரியர் தொல்காப்பியனுர் ஙகரம் உடனிலையாக மயங்குமாறு கூறியுள்ளார்.

இனி, இவற்றை முறையே நோக்குவோம்;

1. மெய்மயக்கத்தைக் குறித்துத் தொல்காப்பியனுர் கூறியனபோன்று, நன்னூலாரும் கூறியுள்ளாராயினும், தொல்காப்பியத்தில் உள்ள முறை நன்னூலில் இல்லை. தொல்காப்பியனுர் தனியெழுத்தின் இலக்கணங்களை நூன்மரபிற்கூறி, மொழிகளினின் றறிதற்பாலவாய எழுத்து இலக்கணங்களை மொழிமரபிற் கூறினுர். அவ்வியலில் சார்பெழுத்துக்கட்குக் கூறிய 2, 4, 6-இம்மூன்று சூத்திரங்களும் ஒன்றின முடித்தல்என்பதனுல் முறையே 1,3,5-ஆஞ் சூத்திரங்களை அடுத்து வைக்கப்பட்டன. ஏனைய சூத்திரங்களெல்லாம் தனிமொழியி

57. 1. ஷ. 14. 26.
2. ஷ. 14. 26.7
3. ஷ. 14. 27.
4. ஷ. 14. 27.
5. ஷ. 14. 27, 8.
6. ஷ. 14. 28.
7. ஷ. 14. 28.

னின்று அறியப்படும் எழுத்திலக்கணங்களே. இதனை, 'இதனுள் (மொழி மரபினுள்) கூறுகின்றது தனி நின்ற எழுத்திற்கன்றி, மொழியிடை யெழுத்திற்கென உணர்க' என்னும் உரையாசிரியருரையானும் அறியலாகும். இவற்றால், நூன் மரபிற்கூறிய மெய்ம்மயக்கம் இன்ன மெய் இன்னமெய்யோடு மயங்கும் என்னும் துணையே என்பதும், மொழிமரபில்,

'யாழ என்னு மூன்று மொற்றக்
கசதப ஙஞநம ஈரொற் றாகும்'

என்று கூறியமெய்ம்மயக்கம் தனிமொழியில் மெய்கள் மயங்கும் மயக்கமே என்பதும் நன்கு அறிதல் கூடும். நூன்மரபிற் கூறிய மெய்ம்மயக்கத்தை மொழிமரபிற் கூறின், அது தனி மொழிக்கண் மயங்கும் மெய் மயக்கமே என்று கொள்ளப்படுமாகலின், அவற்றை மொழிமரபிற் கூறாது, நூன் மரபிற் கூறினர். அதனை, இளம்பூரணர் தனிமொழி புணர்மொழி இரண்டன்கண்ணுங் கொண்டதே அமைதி. அங்ஙனம் கொள்ளாக்கால்,

'ஞ ந ம வ என்னும் புள்ளி முன்னர்
யஃகான் நிற்றல் மெய்பெற் றன்றே'

என்பது முதலிய சூத்திரங்களுக்குப் பொருள் அமைவுறுதல் இன்று. நூன் மரபிற் கூறப்பட்ட வேற்றுநிலை மெய் மயக்கச் சூத்திரங்களெல்லாவற்றினும்,

'டறலள என்னும் புள்ளி முன்னர்...உரிய.'
'லளஃகான் முன்னர்...தோன்றும்.'
'ஙஞணநமன எனும் புள்ளி முன்னர்...
நிலையே.'
'ணனஃகான் முன்னர்...உரிய.'
'ஞநமவ என்னும் புள்ளி முன்னர்...
பெற்றன்றே.'
'மஃகான் புள்ளி முன்...தோன்றும்.'
'யரழ என்னும் புள்ளி முன்னர்...தோன்றும்.'

என்று, இன்னமெய்களுக்கு முன் இன்ன மெய் வரும் என்று கூறியிருப்பதுவும், மொழிமரபிற் கூறிய மெய்ம்மயக்கச் சூத்திரத்தில், அவ்வாறு 'முன்' என்னுஞ் சொல்லைக் கூறாமல்,

'யரழ என்னு மூன்றும் ஒற்ற...ஆகும்.'

என்று கூறியிருப்பதுவும் ஆழ்ந்து நோக்கற்பாலன. இதனை நோக்காமல் நன்னூலார் எல்லா மெய்ம்மயக்கங்களையும் ஒருங்கு கூறியதே யன்றி,

'யரழ முன்னர் மொழி முதன் மெய் வரும்'

என்றது போன்றே,

'யரழவொற் றின்முன்...ஈரொற்றாம்'

என்றுகூறி, அவ்விரண்டற்கும் வேறுபாடறியலாகாதவாறு மயங்க வைத்தார். தொல்காப்பியத்திற்போன்று முறையும் தெளிவும் நன்னூலில் இல்லாததனைன்றே சங்கர நமச்சிவாயப் புலவரும்,

'யரழ முன்னர் மொழிமுதன் மெய்வரும்'

என்னுஞ் சூத்திரத்தின் உரையில், யரழ முன்னர் ஙகர மெய் மயங்குதற்குக் காட்டிய வேய்ங்குழல், ஆர்ங்கோடு, பாழ்ங்கிணறு என்னும் உதாரணங்களையே,

'யரழவொற்றின்முன் கசதப ஙஞநம ஈரொற்றாம்'

என்னுஞ் சூத்திரத்தின் உரையிலும் யரழ முன்னர் ஙகரமெய் மயங்குதற்கு உதாரணமாகக் காட்டி மயங்கினர். ஆகலின், தொல்காப்பியனார் கூறிய முறை பிறழாமலே நன்னூலாரும் கூறியுள்ளார்என்றது உண்மையன்றென நன்கு அறியலாகும்.

2. இனி, இரண்டாமதனை நோக்கு வோம்:

செய்யுளியலில் முதற்கண்,

'மாத்திரை யளவும் எழுத்தியல் வகையும்
**மேற்கிளந் தன்ன** என்மனார் புலவர்'

என்று ஆசிரியர் கூறியுள்ளார். எழுத்துக்களின் மாத்திரையும் அவை இயலும் வகையும் செய்யுளியலிற்கூறற்பாலன என்பதும், அவ்வாறு கூறின் (அவை மேற்கூறப்பட்டிருத்தலின்) 'கூறியதுகூறல்' ஆகுமாதலின் அவற்றை ஆண்டுக் கூறிற்றிலர் என்பதும், அவற்றை மேற்கூறியவாறே ஆண்டும் கொள்ளுதல் வேண்டும் என்பதும் இச் சூத்திரத்தாற் பெறப்படுவனவாகும். இச்சூத்திரத்தில், 'மேல்' என்று கூறியது எவ்விடத்தை? மாத்திரை யளவும் எழுத்தியல் வகையும் நூன்மரபு மொழிமரபுகளிலன்றி, வேறு யாண்டுக் கூறப்பட்டுள்ளன? நூன்மரபிற் கூறிய மாத்திரை யளவும் எழுத்தியல் வகையும் செய்யுளியலில் வேண்டுமிடத்துத் தந்துரைத்தல் வேண்டும் என்பதன்றே 'மாத்திரையளவும்' என்னுஞ் சூத்திரத்திற் கூறப்பட்டது? அதனால் ஒற்றளபெடையில் எழுத்து இயலும் வகையினுக்கும் மாத்திரை யளவிற்கும் நூன்மரபில் இலக்கணம் வேண்டும் என்பது தானே போதரும். **ஆசிரியர் 'மேற்கிளந் தன்ன' என்று, நூன்மரபிற் கூறியதனை யுட்கொண்டு ஓதியிருக்கவும்,** ஒற்றளபெடையில் எழுத்தியல்வகைக்கு நூன்மரபிலுள்ள விதியைக் கூறுவது பெரியதோர் விந்தை என்று நாட்டாரவர்கள் கூறுவதே பெரியதொரு விந்தையினும் பெரியதொரு விந்தை!

3. நெட்டெழுத்துக்களின் பின் உயிர்க்குற்றெழுத்துக்கள் மயங்கிநிற்றற்கு இலக்கணம் யாண்டுக் கண்டார்கள் என்று நாட்டாரவர்கள் எழுதியிருக்கின்றூர்கள். மெய்மயக்கத்தின் தொடக்கத்தில் **'உயிர், மெய், உயிர்மெய் என்னும் மூன்றனையும் உறழ்ச்சிவகையான் உறழ ஒன்பது உளவா மன்றே?** அவற்றுள் தனிமெய்யோடு தனிமெய்மயக்கமேயாற் கூறியது எனின், **அவற்றிற்கு வரையறை இன்மையின் வரையறையுடைய தனிமெய்மயக்கமே கூறியொழிந்தான்** என உணர்க.' என்று இளம்பூரணர் எழுதியிருப்பதனை திரு. நாட்டாரவர்கள் கருதிற்றிலர் போலும். உயிர் முன்னர் உயிர் முதலியன வரையறை இன்றி வேண்டியவாறே மயங்கும் என்பது உரையாசிரியருரையால் தெளிவாக அறியப்படுமன்றே? அன்றியும்,

'அ இ உ, எ ஒ என்னும்...'
'ஆ ஈ ஊ ஏ ஐ, ஓ ஔ என்னும்...'
'அ இ உ அம் மூன்றும்...'

என்பவற்றிலும், பிறுண்டும் உயிரோடு உயிர் மயங்கி நிற்றலின்,'' இவ்விதியை 'உடம்பொடு புணர்த்தல்' என்பதனுனுங் கொள்ளலாகுமே. [58] 'ஆசிரியர் யாதேனும் ஒன்றைக் கூறுதுவிட்டிருப்பின் அதனை அமைத்துக் கோடற் பொருட்டன்றோ புறனடை உத்தி முதலாயினவற்றைக் கூறிவைத்துள்ளார்?' என்று நாட்டாரவர்களே எழுதியிருக்கின்றூர்களே!

உயிரளபெடையைக் குறித்து ஆசிரியர் தொல்காப்பியனுர் கூறியிருப்பதனை முதற்கண் நோக்குதும்:

---

58 அ 14 27

'குன்றிசை மொழிவயி னின்றிசை நிறைக்கும்
நெட்டெழுத்திம்ப ரொத்தகுற் றெழுத்தே'

என்பது உயிரளபெடைச் சூத்திரம். இது, 'நீட்டம் வேண்டின்' என்னுஞ் சூத்திரத்தின் பொருளை விரித்துக் கூறுவது. இச் சூத்திரத்தில், 'இசை நிறைக்கும்' என்பதன் வினைமுதல் குற்றெழுத்து என்பது. இன்ன குற்றெழுத்து என்பது தெரிதற் பொருட்டு 'ஒத்தகுற்றெழுத்து' என்றார். அது யாண்டு நின்று ஓசையை நிறைக்கும் என்னும் ஐயம் நீக்குதற்பொருட்டு, 'நெட்டெழுத் திம்பர்' என்றார். ஆகலின், ஓசை குறைந்த மொழிகளில் ஆண்டுள்ள நெட்டெழுத்தின் முன் அதற்கு ஒத்த குற்றெழுத்து நின்று குறைந்த ஓசையை நிறைக்கும் என்பது இச்சூத்திரத்தின் பொருள். ஆயின், ஒத்த குற்றெழுத்து இல்லாத ஐகார ஔகாரங்களின்முன் நின்று இசை நிறைக்குங் குற்றெழுத்து யாது என்னும் ஐயத்தை நீக்குவார்,

'ஐ ஔ என்னும் ஆயீ ரெழுத்திற்
கிகர உகரம் இசைநிறை வாகும்'

என்று கூறினர். இவ்விரண்டு சூத்திரங்களாலும் ஓசை குறைந்த மொழிகளில் நெட்டெழுத்திற்குமுன் ஒத்த குற்றெழுத்து நின்று அம்மொழியில் ஓசையை நிறைக்கும் என்பதுவே கூறப்பட்டதாகலான், முன்னைய எழுத்தின் ஓசையை மிகுவிப்பதே அளபெடை என்று நாட்டாரவர்கள் கூறும் இலக்கணம் தொல்காப்பியனார் கருத்தன்றாதல் நன்கறியப்படும். நன்னூலார் கருத்தும் அஃதன்று. அவர் வடமொழி வழக்குப் பற்றி நெட்டெழுத்து (இரண்டு மாத்திரைக்குமேல்) நீண்டு ஒலிக்கும் என்றும், அதனை அறிவித்தற்கு ஒத்த குற்றெழுத்து அடையாளமாய் நிற்கும் என்றுமே கூறியுள்ளார்.

'இசைகெடின் மொழிமுத லிடைகடை
நிலைநெடில்
அளபெழும் அவற்றவற் றினக்குறில் குறியே'

என்பது நன்னூற் சூத்திரம். ஆகலின், குற்றெழுத்து வந்து முன்னைய எழுத்தின் ஓசையை மிகுவிப்பதே அளபெடை என்பது ஆசிரியரிருவருக்குங் கருத்தன்றாதல் தெள்ளிது.

வடமொழியில் அ என்னுங் குற்றெழுத்தும் ஆ என்னும் நெட்டெழுத்தும் தனித்தனி எழுத்துக்களாதல் போன்று அ (3 மாத்திரை) என்னும் அளபெடையும் தனியெழுத்தே. அதுபற்றியே, 'உயிரெழுத்து—குற்றெழுத்து நெட்டெழுத்து அளபெடை என மூவகைப்படும்' என்று உரையாசிரியர் கூறுவாராயினர். அதனை மேற்கொண்டு 'எழுத்து முப்பத்து மூன்றனுட் சில எழுத்துக்களை உயிர் என்னும் பெயர் கொடுத்து அவற்றைக் குறிலும் நெடிலும் அளபெடையும் எனப் பெயர் வேறுபாடு கொடுத்து' என்று நச்சினார்க்கினியரும் எழுதினர். இக் கருத்தினானே உரையாளரிருவரும் அளபெடையெழுத்துக்கள் ஏழ் என்று கூறி, அவற்றையும் கூட்டி, எழுத்துக்கள் நாற்பது என்று எழுத்ததிகாரத்தில் எழுதினர்; அன்றியும்; குறிலும் நெடிலும் பிளவு படாத ஓசையே அளபெடை என்றும் எழுதுவாராயினர். இவை யெல்லாம் ஆசிரியர் கருத்திற்கு மாறான வையே என்பது 'குன்றிசை மொழிவயின்' என்னுஞ் சூத்திரத்தானே தெற்றென அறியலாகும்: நன்னூலாரைப்போன்று உயிரளபெடையெழுத்து மூன்றுமாத்திரையுடையது என்று தொல்காப்பியனார் கூறுமை உளங்கொளற்பாலது.

(தொடரும்)

(305-ம் பக்கத் தொடர்ச்சி)

**தமிழிசை வளர்ச்சி**

சென்ற 23—1—42-ல் அண்ணுமலை நகரில் ஓர் இசை மாநாடு நடைபெற்றதாகவும் அதில் பல பெயர்பெற்ற இசைவாணர்கள் கலந்து கொண்டதாகவும், அரசர் அண்ணுமலைச்செட்டியார் அவர்களை வரவேற்றதாகவும், யாவரும் ஆறு நாளளவுந்தங்கிப் பல உட்கழகங்களில் வேலை செய்து தமிழிலுள்ள இசைப்பாடல்களைப் பொறுக்கி இராக தாளம் அமைக்கவும், தமிழில் குறைவாயிருக்கிறதாகக் கருதப்படும் இராக, கீத, சுரசாதிப் பாடல்களுக்கு வேண்டிய ஏற்பாடு செய்யவும் முன்வந்திருப்பதாகவுந் தெரிகிறது. அரசர் எக்காரியத்தை எடுத்தாலும் கருமமே கண்ணுயிருந்து யாவரும் ஒப்ப முடிக்கும் திறலுடையவராதலின் அவர் அருமுயற்சி பெரும் பயனளிப்பது திண்ணம்.

ஒ ஒ ஒ ஒ

இவ்வேலையைத் தொடங்கிவிட்ட மறு நாளே அரசர் திருப்பனந்தாள் திருமடத்திற்குச் சென்று அருண்மிகு தம்பிரானடிகளாரைக் கண்டு தமிழிசை, தமிழர் நாகரிக முதலியவற்றின் முன்னேற்றத்திற்கான முயற்சி எடுத்துக் கொண்டதாகவும் அம்மடத்தின் நன்கொடைக்கு நன்றி செலுத்தியதாகவுந் தெரிகிறது. தமிழ் நாட்டில் தமிழுக்குப் பாடுபடுகிற இரு பெரும்பெரியார் கலந்துகொண்டு யாவர்க்கு முன்னின்ருல் முடியாத பொருளுளதோ?

இத்தமிழிசை யியக்கத்தைப் பெரிதும் ஆதரித்துச் சக்கரவர்த்திஇராசகோபாலாச் சாரியார் ஓர் அரிய கட்டுரையை 1-2-42உ கல்கியில் எழுதியிருக்கிருர். அது அவர் பேரறிவை நன்கு வெளிப்படுத்துகிறது. அவற்றுட் சில பொறுக்குமணிகள் பின் வருமாறு :-

தெலுங்கர் நாட்டில் தமிழ்ப்பாட்டு பாடுவது பைத்தியக்காரத்தனம் என்பது யாராவது சங்கீதக்காரர் பாடிப்பார்த்தால் தெரிந்துவிடும்...கண்ணை மூடிக்கொண்டு கூட்டத்தில் பெரும்பான்மையோருக்குப் புரியாத மொழியில் பாடித்தள்ளுவது சங்கீத வளர்ச்சிக்கு உதவாது...மானிடக் குரலின் வழியாக இசையுடன் கிளம்பும் மொழியில் உள்ள அமுதத்தை வீணுக்கி, பாட்டிலுள்ள நாதக் கோவையை மட்டில் தந்து சங்கீதத்தின் பயன் முடிந்தது என்று சொல்லுவது பெருந்தவறு......மொழியும் பொருளுமிருந்தால்தான் மானிடக்குரல் இசையாகும்; இல்லாவிடில் வெறும் ஓசை தான்...இதைவிட வெறும் வீணை, புல்லாங் குழல், மிருதங்கம் முதலியவற்றை வைத்துக் கொண்டு கொஞ்சநேரம் கச்சேரி நடத்திமுடிப்பது நலம்......" குழலினிது யாழினிது என்ப தம்மக்கள் மழலைச்சொல் கேளாதவர் " இம்மழலைச்சொல்தான் தாய் மொழியாகிறது; தாயின் மொழியே முன் மழலையாகிப் பின் தமிழாகிறது; குழலும் யாழுங் கூடத் தாய்மொழிக்கு ஈடாகாதே! அயல்மொழி எவ்வாறு ஈடாகும்?......... சென்னையிலுள்ள பெரிய வாத்தியார்கள் எல்லாருக்கும் ஆங்கிலத்தில்தான் நன்ருய்ப் பேசமுடியும்; அவர்களை வைத்து ஆங்கிலத்திலேயே குழந்தைகளுக்குப் பாடம் நடத்தச் சொல்லலாம்" என்று யாராவது சொன்னுல் அது அறியாமை என்போம். குழந்தைகள் படிப்பும், எல்லாவித உயர்ந்த உணர்ச்சிகளும் தாய்மொழியில்தான் சரி வர வடிவம் பெறும். இது பொதுவான உண்மை...இந்தத் தாய்மொழிக் கிளர்ச்சி யானது இசையில் மாத்திரமல்ல எல்லாத் துறைகளிலும் ஓங்கி வளரவேண்டும்.

இதில் கட்சிபேதம், கோபம், துவேஷம் இவைகளைப் புகுத்தி இயக்கத்தைக் கெடுக்கக்கூடாது...... தாய்மொழியை விட்டால் வேறுவழியில்லை என்பது உறுதி.

ⓞ ⓞ ⓞ ⓞ

30-1-42-ல் காரைக்குடி இந்து மதாபிமான சங்கத்தின் 25-வது ஆண்டுவிழாவிற்குத் தலைமைதாங்கிய சக்கரவர்த்தி இராசகோபாலாச்சாரியார் மேற்கண்ட கருத்துக்களை விளக்கிப் பேசியதுடன் தமிழிசைக்குத் தமிழ்ப்பாடல் வேண்டியதில்லையெனின் தியாகையரைப் போன்ற தெலுங்கு இசைவலார்களின் அகத்தையுருக்கும் பாடல்களும் வேண்டியதில்லையெனவும், ஒரு காட்டில் குயில், கிளி, பூவை முதலிய பறவைகளிருப்பினும்அவை தத்தம் இயற்கை மொழியிலேயே பாடுவதன்றி யாவும் ஒரே வகையாகப்பாடா எனவும், உள்ளத்தை உருக்குவதற்குப் பொருள் விளங்கவேண்டுமெனவும், அதற்குத்தாய்மொழியே தேவை யெனவுங் கூறியுள்ளார். இவற்றைப் பெரிதும் போற்றுவதுடன் தமிழ்ப் பாட்டுப் பாடும் பொழுதும் பொருள் புரியாது சொற்களைக் குலைத்துத் தமிழ்க் கொலை புரியாது பாட வேண்டுமென்பதையும் வற்புறுத்துகின்றோம். இவ்வாறு கொலைபுரிவதற்கும், உணர்ச்சியின்றிப் பாடுவதற்கும் இடங் கொடுப்பதினால் தெலுங்குப்பாட்டு ஏற்கப் பட்டுத் தமிழ்ப் பாட்டு தள்ளப்பட்டு வந்ததுபோலும். எவ்வாறு இருந்த போதிலும் தமிழிசையியக்கம் தமிழர் யாவராலும் போற்றப் பட்டு வருவதும் அதன் எதிர்ப்புக்கு வேங்கடசாமி நாயுடு, கோபாலரெட்டி முதலிய ஆந்திரர்களையே அழைக்கவேண்டிய நிலைவந்திருப்பதும் குறிக்கொளத்தக்கதாகும்.

25-1-42-ல் சென்னைத் தமிழ் இளைஞர் கழகம் திரு. க. ம. பாலசுப்பிரமணியத்தின் தலைமையிற் கூடிய பொழுது அவர் ஆங்கிலப்புலவர் மார்லி (Morley) கூறியுள்ளபடி பிறமொழி நச்சுக்கலந்த எம்மொழியினரும் முன்னேற்றமடைய முடியாதென்பதை வலியுறுத்தி, ஆரியக் கலப்பே தமிழின் கீழ்நிலைக்குக் காரணமென்றுகூறி அண்ணுமலைப் பல்கலைக் கழகம் தமிழ் வழிப்பயிற்சியை ஏற்றுத் தம் பாடதிட்டங்களை அமைக்க வேண்டுமெனக் கேட்டுக் கொண்டார். அரசர் அண்ணுமலைச் செட்டியாரின் உள்ளுணர்ச்சி இதை ஒப்புமென்றும் கூடிய விரைவில் அதனாலாய பயனைத் தமிழுலகு துய்க்குமென்றுங் கருதுகிறோம்.

ⓞ ⓞ ⓞ ⓞ

**தமிழுக்குப் பாராட்டு**

ஆந்திரசங்க ஆதரவில் கோகலே மண்டபத்தில் கூடிய ஆந்தரமாணவர் கூட்டம் ஒன்றில் வீரத்திரு C. R. ரெட்டியார் அவர்கள் பின் வருமாறு தமிழ்மொழியைப் பாராட்டிப் பேசியுள்ளார்கள்.

ஆந்திரமாணவர்கள் தமக்குள் ஒற்றுமையாக இருப்பதுடன் தமிழ்த் தோழர்களுடன் மிகவும் நெருங்கிப் பழகி அவர்களது வாழ்க்கை முறைகளையும் குறிக்கோளையும் அறிந்துகொண்டு அவர்கள் முயற்சிகளில் ஊக்கங் காட்டுவதே கல்வியின் சிறந்த நோக்கம் ஆதல்வேண்டும்.

தெலுங்க மாணவர்களனைவரும் தமிழ் மொழியைப் படித்தல் வேண்டும். தமிழும் தெலுங்கும் ஒருதாய் மொழியின் கிளைத் தோற்றமே. திராவிட மொழிகளில் தமிழ் தலைசிறந்து விளங்குகிறது. தமிழுக்கும் முதல் திராவிட மொழிக்கும் நெருங்கிய

தொடர் பிருக்கிறது. தமிழில் வடமொழி பெருகக் கலக்கவில்லை. தமிழ் இன்றும் தனிச் செம்மொழியாகவே இருந்து வருகிறது.

தமிழிலக்கியம் இந்திய நாட்டு இலக்கியங்களி லெல்லாம் மிகச் சிறந்தது. மணிமேகலையும் சிலப்பதிகாரமும் தமிழர் அறிவின் சிகரங்களாகும். வடமொழி இலக்கியத்தைப் பற்றிப் பலதிறப்பட்ட இந்தியர்கள் பெருமையாகப் பேசுவது போலத் தமிழிலக்கியத்தைப் பற்றியும் ஏன் பெருமையாகப் பேசக்கூடாது என்பது எனக்கு விளங்கவில்லை.

தெலுங்குக்கும் தமிழுக்கும் நெருங்கிய தொடர்புஇருப்பதனுல் தெலுங்கர் தமிழை எளிதாகக் கற்றுக் கொள்ளலாம். ஆந்திர மாணவர்கள் அனைவரும் கட்டாயம் தமிழைப்படித்தல் வேண்டும்.

ⓞ ⓞ ⓞ ⓞ

இங்ஙனம் வீரத்திரு. C. R. ரெட்டியாரவர்கள் தமிழ் வளர்ச்சியிற் கருத்தூன்றிச் செந்தமிழின் பெருமையைத் தமிழர் இனத்தவராகிய தெலுங்குநாட்டு மாணவர்கட்கு உரிய காலத்தில் எடுத்துரைக்க முன்வந்த உண்மைப் பண்பிற்குத் தமிழர் அனைவரும் நன்றி செலுத்துங் கடப்பாடுடையராவர்.

ⓞ ⓞ ⓞ ⓞ

**ஞானியாரடிகள், தமிழவேள்**

**படத் திறப்புவிழா**

திருப்பாதிரிப் புலியூர் அருட்டிரு ஞானியாரடிகளின் மறைவு குறித்த நினைவுக் கூட்டம் சென்னையிலுள்ள இருபது கழகங்களின் சார்பாகச் சென்னைக் கோகலே மண்டபத்தில் 12–2–'42 வியாழக்கிழமைமாலை 5மணிக்குச் சென்னை அறநிலையப் பாதுகாப்புக் கழக ஆணையாளர் C. M. இராமச்சந்திரஞ் செட்டியார் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. அதுபோது அருண்மிகு ஞானியாரடிகளாரின் திருவுருவப் படத்தைப் பாரிப்பாக்கம் திரு. கண்ணப்ப முதலியாரவர்களும் நம் சங்கத் தலைவர். செந்தமிழ்ப் புரவலர், தமிழவேள் உமாமகேசுவரம் பிள்ளை அவர்களது உருவப் படத்தை வித்துவான் திரு. T. P. மீனுட்சிசுந்தரம் பிள்ளையவர்களும் திறந்து வைத்துப் பாராட்டினமை கேட்டுப் பெரிதும் மகிழ்கின்ருேம். சென்னை மாநிலத்தில் தமிழுக்கும் சமயத்துக்கும் பெருந் தொண்டாற்றிய இவ்விரு பெரியார்களின் திருவுருவப் படங்கள் சென்னை நகரத்தார் காணத் திறந்து வைக்கப் பெற்றமை பாராட்டத் தகுவதொன்றும்.

---

ஞானியாரடிகளார் மறைவு

**இரங்கற்கூட்டம்**

தமிழகம் போற்றும் செந்தமிழ்க்குரவரும் ஐம்பத்திரண்டாண்டுகள் திருக்கோவலூராதீனத்து ஞானியார் திருமடத்தின் தலைவராயமர்ந்து தமிழ்நாடெங்கணும் செந்தமிழ் அருண்மொழி விரிவுரைகளையாற்றி மக்களுக்கு நன்னெறி காட்டிய பெருந் தவச் செல்வரும் ஆகிய அருண்மிகு ஞானியாரடிகளார் 1-2-42 ஞாயிறன்று பழநியிலிருந்து எழுந்தருளிவரும்பொழுது திடீரென இறைவன் திருவடி நீழலடைந்து பிரிந்த துன்புரை கேட்டு வருந்திய கரந்தைத் தமிழ்ச் சங்கத்தார் அவ்வருத்தத்தின் அறிகுறியாக 3-2-42 செவ்வாயன்று முழுவதும் சங்கச்சார்பில் நிகழும்

கல்லூரிகளை மூடித் துயரச் செய்தியைத் தெரிவித்தார்கள்.

அன்று மாலை சங்கத் தமிழ்ப் பெருமன்றத்தில் கரந்தைப் புலவர் கல்லூரித் தலைவர் பண்டித ந. மு. வேங்கடசாமி நாட்டாரவர்கள் தலைமையில் இரங்கற் கூட்டம் நடைபெற்றது. தமிழ் மக்கள் பலர் குழுமியிருந்தனர். அதுபொழுது தலைவரவர்களும் அறிஞர் பலரும் அடிகளாரின் சிறப்பியல்களையும் நற்பண்புகளையும் தொண்டுகளையும் எடுத்துரைத்தார்கள். இங்ஙனங் காலத்தினால் நற்றொண்டு செய்து வந்த அடிகளாரை யிழந்து வருந்தும் தமிழகம் அந்தோ இரங்கத்தக்கது என வருந்தினார்கள்.

யாவரும் எழுந்து நின்று பின்வரும் இரங்கன் முடிபினை ஒருமித்து வெளியிட்டார்கள்.

முடிபு:

திருக்கோவலூராதீனத்துத் திருப்பாதிரிப்புலியூர் ஞானியார் திருமடத்தின் தலைவராயமர்ந்து ஐம்பத்திரண்டாண்டுகள் சமயப்பணி புரிந்த அருட்செல்வரும், இளமாணவர்முதல் முதியோர்வரை தம்மையடைந்தோர் யாவர்க்கும் தமிழறிவுறுத்திய தவச்செல்வரும், தமிழும் சமயமும் வளர்ந்தோங்குதற் பொருட்டுக் கல்லூரி நிறுவியும் பல நற்கழகங்களைத் தோற்றுவித்தும், யாவரும் உண்மைப் பொருளை யெளிதினுணர்ந்து நன்னெறியிலொழுகுதற்கேற்ற இனிய அருண்மொழிகளைத் தமிழ்நாடெங்கணும் பரப்பியும் ஓய்வின்றித் தொண்டாற்றிய பேரருளாளரும் நம் கரந்தைத் தமிழ்ச் சங்கத்தின் ஏழு எட்டாம் ஆண்டு விழாவிலும் வெள்ளி விழாவிலும் தலைமை தாங்கி நல்லுரை கூறிப்போற்றிய தமிழ்ப் பெருந்தகையும் ஆகிய உயர்திரு. சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாச்சாரியசுவாமிகளெனப் பெயரிய அருண்மிகு ஞானியாரடிகளார் அவர்கள் 1-2-42 ஞாயிறன்று பழநியிலிருந்து எழுந்தருளி வரும்பொழுது திடீரென இறைவன் திருவடி நீழலிற் கலந்து நம்மைப் பிரிந்த செய்திகேட்டுக் கரந்தைத் தமிழ்ச் சங்கச் சார்பில் 3-2-42 கூடிய தமிழ் மக்களனைவரும் ஆற்றொணாத் துயருறுகின்றனர்.

௦ ௦ ௦ ௦

இங்ஙனமே திரிசிரபுரச் சைவசித்தாந்த சபை, மலைக்கோட்டை திராவிடர் வாலிபர் கழகம், பழநி சைவசித்தாந்தசபை, கருவூர் தமிழர் கூட்டம் முதலாகத் தமிழ் நாட்டிலுள்ள பல கழகங்களும், சென்னை நகரத்தில் இருபதிற்கு மேற்பட்ட பல கழகங்களும் நம் ஞானியாரடிகளின் பிரிவுக் காற்றாது தம் துயரத்தை வெளியிட்டு வருந்துகின்றன.

௦ ௦ ௦ ௦

சைவசித்தாந்த மகா சமாசத்தின் சார்பாகவும் ஒரு நினைவுக்கூட்டம் திருப்பாதிரிப்புலியூர் ஞானியார் திருமடத்தில் விசு, மாசி முதல் நாள் (12—2—1942) வியாழக்கிழமை மாலை 5 மணிக்கு அருட்டிரு விபுலாநந்த அடிகளார் தலைமையில் நடைபெற்றது. தமிழ் நாட்டிற் பலவிடங்களிலும் அடிகளாரது இனிய சொற்பொழிவைக் கேட்டுத் தெளிவு பெற்ற தமிழ்ப் பெருமக்களும், அடிகளாரிடத்துத் தமிழ் பயின்ற இளம் புலவர்களும், மாணவர்களும் இக்கூட்டத்திற்குப் பெருந்திரளாக வந்திருந்தனர். தலை

வரவர்கள் அருண்மிகு ஞானியாரடிகளாரின் பண்புகளையெல்லாம் உளங்கசிந்து பாராட்டித், திருவருளோடுகலந்த அடிகளாரை வணங்கி அவர்கள் காட்டிய நன்னெறிக்கண்ணே நின்று தொண்டாற்றுதல் தமிழர் கடமையென வற்புறுத்தியுரைத்தார்கள். அடிகளாரிடத்து அன்புவைத்த பெருமக்களும், மாணவர்களும் திருமுருகன் அருளுருவாகிய அடிகளாரின் பண்புகளைப் பாராட்டி வருந்தினர். தஞ்சைக் கரந்தைத் தமிழ்ச்சங்கம், சென்னை அறநிலையப் பாதுகாப்புக்கழகம், காஞ்சிபுரம் ஞானியார் சங்கம் முதலிய கழகங்களும் வேலூர் மாணவ அன்பர்களும், கருவூர் அன்பர்களும், வித்துவான், திரு. மு. இராசாக்கண்ணனார், வித்துவான், திரு. நடராச தேசிகர், ஆ. மா. சிவஞானம், சி. பழனிக் குமாரன், முதலியவர்களும் அடிகளின் பிரிவாற்றாது வருந்திப்பாடிய கையறுநிலைச் செய்யுட்கள் அச்சிடப் பெற்று வந்திருந்தோர்க்கு வழங்கப் பட்டன. அச்சிடப்படாது பலரும் எழுதியனுப்பிய கையறுநிலைச் செய்யுட்களும் குறித்துக் கொள்ளப் பெற்றன. வெளியூர்களிலிருந்து தமிழ்ப் பெரியார் பலர் அனுப்பிய கம்பிவழிச் செய்திகளைத் திரு. கி. நாராயணசாமிநாயுடு அவர்கள் படித்தார்கள். தலைவர் முடிவுரைக்குப் பின்னர் இதுபோது திருக்கோவலூர் ஆதீனத்து ஞானியார் திருமடத்தின் தலைமையை மேற்கொண்ட அடிகளாரவர்கள் தம் அருட்குரவராகிய ஞானியாரடிகளின் அருட்பண்புகளை எடுத்துரைத்து இக்கூட்டத்திற்குத் தலைமை தாங்கிய விபுலாநந்த அடிகளார்க்கும் இத் துயரச் செய்தியில் கலந்துகொண்ட திருவாவடுதுறை ஆதீனத்தார்க்கும் தமது நன்றியைத்தெரிவித்து யாவர்க்கும் வாழ்த்துரை கூறினார்கள். சமாச அமைச்சர்நன்றி கூற, இரவு ஒன்பது மணிக்கு முருகன்வழிபாட்டுடன் கூட்டம் இனிதே நிறைவேறியது.

உ

திருப்பாதிரிப்புலியூர்

அருண்மிகு

# சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாச்சாரிய சுவாமிகள்

திருவருளிற்கலந்து மறைந்தமை குறித்துத்

தஞ்சைக்

## கரந்தைத் தமிழ்ச் சங்கத்தார்

இரங்கிக் கூறிய

## கையறுநிலைச் செய்யுட்கள்

*11—2—1942*

அப்பருவர்க் கடலேறி யருட்கடலிற் குளித்ததிருப் புலிசை யாகும்
செப்பருநற் பதியதனின் மெய்ஞ்ஞான குரவனெனத் திகழ்ந்த மேலோய்
திப்பியநீ றணியுருவும் அருளொழுகு மிணைவிழியும் தீஞ்சொல் வாயும்
இப்புவியோர் நினைந்துநினைந் திடர்க்கடலிற் குளித்திடநீ யெங்குற் றாயே.

எழுமுகிலு மொன்ருகி யமிழ்தமழை பொழிவதென வெவரும் போற்றும்
பழுதறுநின் சொன்மழையால் உளங்குளிர்ந்தே யுயிர்குழைந்த படியே மெல்லாம்
அழுதழுதுண் ணீரறுமா றகன்றிடல்நின் னருணீர்மைக் கமைவ தாமோ
தொழுதகுநின் றிருவடித்தொண் டினியாங்கள் பெறுவதெவன் சொல்கிற் பாயே.

ஆறுமுகப் பண்ணவனை முறைமையினல் நாடோறு மருச்சித் தேத்தி
ஈறிலவ னருட்கடலிற் றிளைத்தநின திணையிலா அன்புக் கேற்ப
வீறுபுகழ்ப் பூசநாள் அவனடியை மேவினையென் றுலும் யாங்கள்
தேறும்வகை யறியாது திகைக்கின்றேம் திகைப்பொழிய வருள்செய் வாயே.

**ந. மு. வேங்கடசாமி நாட்டார்.**

மண்முகமாம் பாதிரியூர் மலிதவத்தின் வாழ்வு, சிவ
சண்முக மெய்ஞ் ஞானசிவாச் சாரியராம் எமதடிகள்
விண்முகத்தை வாழ்விக்க, வினையுழலித் தமிழகத்தை
எண்முகத்தும் துயர்க்கடல்சூழ்ந் தெழுந்துவிழுங் கியதந்தோ!

என்றினிக் காண்பேம் அந்தோ எங்கள்நற் குரவன் றன்னை!
என்றினிக் காண்பேம் ஐயோ எழிலுறு திருமு கத்தை!
என்றினிக் காண்பேம் அன்னே இயலருள் ஒழுகும் கண்ணை!
என்றினிக் காண்பேம் மன்னே இளநகை யொளிர்செவ் வாயை!

எங்கினிக் கேட்பேம் அந்தோ இணையிலாச் சொற்பெ ருக்கை !
எங்கினிக் கேட்பேம் ஐயோ இருங்கலைத் தெளிவு தன்னை !
எங்கினி யுறுவேம் அந்தோ இவ்வுல கமிழ்தா மனைத,
எங்கினிப் பெறுவேம் அந்தோ இப்பிறப் பறும ருந்தை !

அன்னதோர் திருமு கத்தை ஆர்வுறக் காண்ப மாயின்,
சொன்னலம் கனிந்த தேனும் சொற்பொழி வுறுவ மாயின்,
இன்னவிவ் வுலக மொன்றே இந்திரன் வாழ்வும் வேண்டேம்
என்னினித், தொழுவோம் அன்னோன் இணையடி மலர்க ளம்மா !

**R. வேங்கடாசலம் பிள்ளை.**

தமிழர்களின் பெருவைப்பே ! தமிழ்ச்சமயப் பேரொளியே ! தமிழர் போற்றத்
தமிழ்ச்சுவையை யூட்டியவ ருளமகிழக் கண்டுவக்குந் தாவில் கொள்கை
தமிழகத்தில் நினதேயே தவவுருவீ ரக்கொள்கை தாங்கி யீண்டுத்
தமிழ்வழங்க வெழுந்தருளும் பெரியோரியா ரடிகளெமைத் தணந்தி ரந்தோ !

சொல்வளமும் பொருள்வளமுங் கேட்டார்தம் முளஞ்சென்று சோர்வைப் போக்கும்
நல்வளமார் சொற்பொழிவுக் கிலக்கணமாய் நானிலத்தில் நல்லோர் போற்றப்
பல்கலையும் பன்மொழியும் ஒருங்குணரச் சொன்மழைபெய் பண்பார் கோவே !
அல்லுயர யாமயர வடியேமை யகன்றதெவ னந்தோ வந்தோ !

அருட்குரவ ! நின்னுயர்ந்த சொற்பொழிவை யொலித்தட்டில் அமைத்தே மல்லேம்
தெருட்பெறவே செய்யுளினைப் பிரித்தமைத்துப் பொருள்விளங்கச் செய்யும் சீர்த்தி
மருட்கையுற நின்பாலே யொன்றியதொன் பான்சுவையும் வயங்கித் தோன்ற
இருட்படலங் கெடமொழிந்திங் கிலங்கினையெங் குற்றுயோ யீதென் னையோ !

வடலூர்வாழ் வள்ளலார் மறைவுகுறித் தமைத்தவர்தா மறைந்த நாளில்
அடல்சேரெம் பெருமுருக னடிக்கமலத் துற்றனையா ரறிவர் நீவிர்
உடல்சேரின் னுயிர்க்கூட்டம் வாழ்வுறவே வந்தீரவ் வுயிர்க ளோங்கற்
கிடமாக யாருரைகொண் டுய்ந்திடுமீ தென்கருதி யென்செய் தீரே !

எத்துணையோ மடத்தலைவ ரிருந்தார்க ளிருக்கின்று ரிருந்து மென்ன ?
வித்தகநின் பெரும்புகழ்முன் மின்மினியா யவரொழிந்தார் வீருர் செம்மல்
எத்திசையும் புகழ்சைவ சித்தாந்த கழகமதை யினிதிற் கண்டு
முத்தமிழும் வளர்த்தனைமுன் பின்னெவரிப் புகழ்பொறித்தார் முனைவ மன்னே.

**கோ. சி. பெரியசாமி.**

காரிருளில் வழிநடப்போர் களிக்கத் தோன்றிக்
கதிர்நிலவைப் பொழியுமொரு குளிர்வெண் டிங்கள்
மாரிநாள் நள்ளிரவில் வழிப்போ வார்தாம்
வருந்திடவே மலைமறையுஞ் செய்தியேபோல்
பார்பரவ முருகனருட் பரிசு போற்றிப்
பைந்தமிழைப் பரப்பிநலம் பாலித்திட்ட
ஆர்வமிகு ஞானியா ரடிக ளென்னுந்
தமிழ்த்திங்கள் பொதினிமலை மறைந்த தந்தோ!

உலகமெலா மிருணீங்கப் பொருள்க டோன்ற
ஒளியுதவு கதிரேபோ லுயிர்க ளுள்ளத்
திலகுமல மறநீக்கி யுறுதிகாட்டி
யின்றமிழா லுணர்வூட்டும் எங்கள் தோன்றல்
பலகலையுங் கற்றுணர்ந்தவ் வழியி னிற்கும்
பண்புடைய தமிழறிவர் பாரோர் போற்றக்
குலவியமெய்ஞ் ஞானியா ரடிக ளென்னுங்
குணக்குன்றம் நமைப்பிரிதல் கொடுமைத் தந்தோ!

மாறுபடுஞ் சமயமெலாம் நுனித்தா ராய்ந்து
மக்களைநல் வழிப்படுத்தும் மாண்பார் செம்மல்
தேறுநிலை யறியாதா ரிலரின் றென்ன
வூர்தோறுஞ் செந்தமிழே செழிக்கச் செய்தோய்
ஆறுலவு செய்யசடை யைய னென்ன
அவனருளும் செவ்வேள்த னருளே போற்றும்
பேறெனவே மதித்தொழுகு பெரியோய் எம்மைப்
பிரிந்துறைதல் நின்னருளின் பெற்றி யாமோ?

அருள்பழுத்த திருமுகத்தெம் மடிகளே நும்
அன்பருளத் திடர்தீர்க்கும் ஆர்வ நோக்கும்
மருள்வழித்தாம் நெஞ்சினரும் மயக்கந் தீர
வாய்மைநெறி காட்டியவர் வணங்கு மாற்றால்
தெருள்பழுத்த விரிவுரையுஞ் சேர்வார் தங்கள்
நலம்வேண்டித் திருவருளை யிறைஞ்சிச் செப்பும்
பொருள்பழுத்த வாழ்த்துரையும் இனியார்கண் யாம்
போய்ப்பெறுவ தறிகிலோம் புகல்வீர் கொல்லோ

வள்ளுவர்சொல் பொதுமறையைப் போன்று பல்லோர்
வளமுறநற் றமிழ்மழையைப் பொழியுங் கொண்டல்
எள்ளலிலா நின்னுரையி னேற்றங் காண்போர்
இதுமுருக னருளெனவே நினைப்ப ரன்றிக்
கொள்ளுவரோ வேறாக யாமென் செய்வேம்
கோவல்நக ராதீனக் குரிசில் எங்கள்
வள்ளல்முரு கிறைபொதினி வருநிற் கண்டு
வழிமறித்துக் கொண்டானே தமிழர் வாழ்வே.

க. வெள்ளைவாரணன்.

# தமிழ்ச் செய்திகள்

### திரிசிரபுரச் சைவ சித்தாந்த சபை
### 56-ஆம் ஆண்டு நிறைவு விழா

இவ்விழா 17, 18-1-42-ஆம் நாட்களில் திருச்சிராப்பள்ளி மலைக்கோட்டை தாயுமானர் கோயில் நூற்றுக்கால் மண்டபத்தில் திருக்கோவலூர் ஆதீனம் திருப்பாதிரிப்புலியூர் ஞானியாரடிகளார் தலைமையில் மிகச் சிறப்பாக நடந்தேறியது. அடிகளார் தமது முன்னுரையில் மக்கட் பிறப்பின் மாண்பினையும் சமயப்பற்றின் இன்றியமையாமையையும் விளக்கியருளினார்கள் திருவாளர்கள் க. வச்சிரவேல் முதலியார் B. A., L. T., பெருஞ்சொல் விளக்கனார். அ. மு. சரவண முதலியார், ஆசிரியர். அ. வரதநஞ்சைய பிள்ளை, கவிராச பண்டிதர் செகவீரபாண்டியன் ஆகிய பெரியோர்கள் பல நற் பொருள்பற்றிச் சொற் பொழிவாற்றினார்கள். அடிகள் முடிவுரைக்குப் பின்னர்த் திருவான்மியூர் சிங்காரவேலு முதலியாரவர்கள் திருமறை இசையுடன் அமைச்சர் நன்றி கூற விழா இனிதே நிறைவேறியது.

### பழநி. திரு. தண்டாயுதபாணிசுவாமி கோயில் தைப்பூச விழா.

இவ்விழா 23-1-42 முதல் 31-1-42 வரை அருண் மிகு ஞானியாரடிகளார் தலைமையில் மிகவும் சிறப்பாகக் கொண்டாடப்பெற்றது அடிகளார் தமது முன்னுரையில் சிவத்தின் மாண்பு, அடியார் பெருமை, திருமறைச் சிறப்பு ஆகிய உண்மைகளை யாவரும் தெளிய விளக்கியருளினார்கள். திரு. C. K. சுப்பிரமணிய முதலியார், சிவத்திரு, ஈசானசிவாசாரியார் முதலியோர் சொற்பொழி வாற்றி மகிழ்வித்தார்கள். அடிகளார் தமது முடிவுரையில் தமிழ்மொழியின் மாண்பு, முருகன் வழிபாட்டின் சிறப்பு இவற்றை விளக்கி யருளினார்கள். பழநித் திருக்கோயில் கண்காணிப்பாளர். திரு. ஜே. எம். சோமசுந்தரம்பிள்ளையவர்கள் நன்றி கூற விழா இனிதே நிறைவேறியது. அருண் மிகு. ஞானியாரடிகளார் பழநியில் ஒரு வாரத்திற்கு மேல் எழுந்தருளியிருந்தபொழுது வள்ளி திருமணம், கண்ணப்பர், முருகன் பெருமை, சிவாலய தத்துவம், சிவராசயோகம் என்னும் பொருள் பற்றிய சொற் பொழிவுகளைத் தமிழ்நாட்டு மக்களுக்குத் தமது முடிந்த அறவுரையாக வெளியிட் டருளியது என்றும் நினைத்தற் குரியதாம்.

### கரந்தைத் தமிழ்ச் சங்கம்.
### விரிவுரைக் கூட்டம்.

நிகழும் விசு, தை, உ௬, (8-2-'42) ஞாயிறு மாலை ௬ மணிக்குச் சங்கத் தமிழ்ப் பெருமன்றத்தில் தமிழ்ப்பேராசிரியர், உயர்திருவாளர், ச. சோமசுந்தர பாரதியாரவர்கள் M. A., B. L., "செய்யுட் சுவையும், மெய்யுணர்வும்" என்னும் இனியதோர் ஆராய்ச்சிச் சொற்பொழிவாற்றி நம்மனோரை மகிழ்வித்தார்கள்.

# நூன்மதிப்பு.

### தொல்காப்பியம்-சொல்லதிகாரம் நச்சினர்க்கினியம்.

பதிப்பாசிரியர்.—
மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை.

கிடைக்குமிடம் :— பவானந்தர் கழகம், வேப்பேரி, சென்னை.
விலை:-ரூ. 3-0-0

பழந்தமிழ் இலக்கண நூலாகிய தொல்காப்பியச் சொல்லதிகாரப் பகுதிக்கு நச்சினர்க்கினியர் எழுதிய உரையினைக் காலஞ்சென்ற தமிழ்ப் பெரியார் யாழ்ப்பாணம் சி. வை. தாமோதரம் பிள்ளையவர்கள் கி. பி. 1892-ல் பதிப்பித்து வெளியிட்டார்கள். அப் பதிப்பினையடியொற்றி, ஏடெழுதுவோராலும், பாடங்கேட்போராலும் சிற்சில இடங்களில் புகுத்தப்பட்டு அச்சேறிய பிழைகளைக் களைந்து திருந்தியமுறையில் இப்பதிப்பு வெளியிடப் பெற்றுளது.

நச்சினர்க்கினியர் தமது உரையில் மேற்கோளாக எடுத்தாண்ட செய்யுட்களின் உண்மையுருவம் இஃதெனவிளக்கி இடஞ்சுட்டியும், பாட வேறுபாடுகளைக் குறிப்பிட்டும் படிப்போர்க்குப் பொருள் இனிது விளங்குமாறு அரிய புணர்ச்சிகளைப் பிரித்து நிறுத்தக் குறிகளையமைத்தும், அருஞ்சொற்பொருள் முதலியவற்றை அகரவரிசையில் தொகுத்தும் தமிழ் மாணவர் யாவர்க்கும் பயன்படுமாறு பவானந்தர் கழகத்தார் இந்நூலைச் சிரிய முறையில் வெளியிட்டுள்ளார்கள். தமிழ்வளர்ச்சியினைத் தன் வாழ்க்கை நோக்கமாகக் கருதித் தமிழ் நூல்கள் பலவற்றை வெளியிட்டுள்ள பெரியார் காலஞ்சென்ற திவான்பகதூர், ச. பவானந்தம் பிள்ளை யவர்களீட்டிய பொருளை முதலாகக் கொண்டு தமிழ்த் தொண்டாற்றப் போந்த பவானந்தர் கழக நற்றொண்டின் பயனாக நெடுங்காலமாகப் படிகள் கிடையாதிருந்த குறை நீங்க வெளிவந்த இப் பதிப்பினைத் தமிழறிஞர் பலரும் ஆதரித்துப் போற்றுங் கடப்பாடுடையர்.

---

### அருங்கலச்செப்பு

பதிப்பாளர் :—
S. செயராமையா, கும்பகோணம்.

கிடைக்குமிடம் :- 42. இராமசுவாமி கோவில் மேலவீதி, கும்பகோணம்.

விலை:- ரூ. 1—4—0

நற்காட்சி, நன்ஞானம், நல்லொழுக்கம் என்னும் மும்மணிகளைத் தன்னுட்பொதிந்துவைக்கப்பெற்ற பணிப் பெட்டி யெனப் பாராட்டப்படும் அருங்கலச்செப்பு என்னும் இந்நூல் சமண சமயத்தை மேற்கொண்டு இல்லறத்தில் வாழும் நோன்பிகளின் ஒழுக்கங்களைப் பற்றி நூற்றெண்பது (180) குறள் வெண்பாக்களால் சுருங்கக் கூறி விளங்க வைக்கும் இனிய தமிழ் நூலாகும். இதனை இயற்றிய ஆசிரியர் இன்னரெனவும், இன்னகாலத்தவர் எனவும் புலப்படவில்லை. இந்நூலின் பழைய உரையைத் தழுவி திரு. தர்மசாம்ராஜ்யம்சாத்திரியாரவர்கள் புத்துரையெழுதி இல்லற நோன்புகளை விளக்கும் நீதிக்கதைகளையும் இதனுடன் வெளியிட்டுள்ளமை யாவர்க்கும் பயன் தருவதொன்றும்.

ஞானியாரடிகள்
கந்தர்சட்டிச் சொற்பொழிவுகள்.

தொகுத்தோர்:— வித்துவான், திரு. மு. இராசாக்கண்ணுமுதலியார் P.OL.

பதிப்பாளர்:— தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார் 6. பவழக்காரத்தெரு, சென்னை.

விலை:-ரூ. 1—0—0

நம் தமிழ் மக்களுக்கு எய்ப்பில் ஞானவைப்பெனத் திருக்கோவலூராதீனத்து அருட்குரவராய்த் திகழ்ந்து திருப்பாதிரிப்புலியூரி லெழுந்தருளியிருந்த அருண்மொழி நாவலர், சிவ சண்முகமெய்ஞ்ஞான சிவாச்சாரிய அடிகளார் விசு ஐப்பசியில் ஞானியார் திருமடத்தில் நிகழ்ந்த கந்தர்சட்டித் திருவிழாவின் ஐந்து நாட்களிலும் சொற்பொழிவாற்றிய வேளையிலேயே அடிகளாரின் மாணவருளொருவராகிய வித்துவான் திரு. மு. இராசாக்கண்ணு முதலியார் P. OL. அவர்கள் பலர்க்கும் பயன்படும்படி இனிய சொற்பொழிவுகள் ஐந்தினையும் உடனிருந்து எழுதிமுடித்து அடிகளார் பார்வைக்குய்த்துத் திருத்தஞ் செய்து சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாரின் துணைகொண்டு வெளியிட்டுதவியுள்ளார்கள்.

ஞானியாரடிகளாரது அருள் பழுத்த சொன்னடையினையே பெரும்பாலும் அடியொற்றிப் பொருள் சிதையாது தொகுக்கப்பெற்ற இவ்வுரை நடை நூல் அவர்களது சொற்பொழிவினை ஒலித்தட்டில் அமைத்தோமிலமே என அடிகளையிழந்து வருந்தும் தமிழகத்தார்க்கு ஒருவாறு ஆறுதலளிக்குமென நம்புகின்றோம். இங்ஙனமே ஊர்தோறும் அடிகளார் பேசிய ஆயிரக்கணக்கான சொற்பொழிவுகளின் குறிப்புக்களையும் பொருள்விளங்க வகைப்படுத்தி வெளியிடல் வேண்டுமென வேண்டுகின்றோம்.

---

மருதவரை மாண்பும்
மருதகிரியான் மகிமையும்

ஆசிரியர் :—
சி. கு. நாராயணசாமி முதலியார்.

கிடைக்குமிடம் :—பேரூர் P. O. கோவை.

விலை:- அணா 6.

கொங்கு நாட்டில் தமிழ் முருகன் எழுந்தருளி அடியார்கட்கருள்சுரக்கும் குன்றமாகிய மருதமலையின் வளமலிந்த தோற்றங்களும் அம்மலையின் தொடர்பான வரலாற்றுக் குறிப்புக்களும் ஆங்கெழுந்தருயிருக்கும் திருமுருகனது அருட் செயல்களும் ஆகியவற்றை, யாவரும் எளிதினுணருமாறு இந்நூலெழுதப்பட்டுளது. இங்ஙனமே ஏனைய இடங்களின் வரலாறுகளையும் இவ்வாசிரியர் எழுதியுதவும்படி ஊக்குதல் தமிழ்ச் செல்வர்களின் நீங்காக் கடமையாகும்.

---

தனவணிகன் பொங்கல்மலர்

இதழாசிரியர்:—ஆ. கு. பூங்காவனம்.

கிடைக்குமிடம் :—79-29, இரங்கூன்.

விலை:-அணா 10.

பர்மாவில் வாழும் தமிழ் வணிகச் செல்வர்களாகிய நாட்டுக்கோட்டைச்

செட்டியார் சங்கத்தின் சார்பாக வெளி வரும் தனவணிகன் என்னும் இதழின் தொடர்பான விசுவாண்டின் பொங்கல் மலர் வரப்பெற்று மகிழ்ந்தோம். தாய் மொழியாகிய தமிழ் மொழியினை உயி ரெனப் போற்றிவரும் அறிஞர்களின் பொருளுரைகள் இம்மலரிலிடம்பெற்றுத் தமிழ்மணம் பரப்புதல் பாராட்டற் பாலது.

---

### தமிழ் மகள்

இதழாசிரியர் :—
மங்களம்மாள் மாசிலாமணி.

கிடைக்குமிடம் :— வண்ணார்பண்ணை, யாழ்ப்பாணம்.

ஆண்டுக் கட்டணம்:-ரூ. 3-0-0

திரு. மங்களம்மாள் அவர்களை ஆசிரியராகப் பெற்று மகளிர் முன் னேற்றத்தினைக் குறிக்கொண்டு யாழ்ப் பாணத்தினின்றும் வெளிவரும் தமிழ் மகள் என்னும் திங்கள் வெளியீடு. ஆன்ற அறிவும் தமிழின்பாற் பேரார்வமுங் கொண்ட அறிஞர் பலரது கட்டுரை யினைத் தன்னகத்துக் கொண்டு வெளி வருவதுகண்டு உளமகிழ்கின்றோம். தமி மூன்னையின் திருவடித் தொண்டினைப் பொருளாகக் கொண்ட இவ்விதழினைத் தமிழ்மக்கள் போற்றி வளர்த்தல் வேண்டும்.

---

### சித்திரபானு வருட வாக்கிய சைவப் பஞ்சாங்கம்

கணித்தோர் : சோதிட வித்துவானும் தமிழ்ப்புலவருமாகிய திருவாளர் இ. மு. சுப்பிரமணிய பிள்ளை யவர்கள்

வெளியிட்டோர் : தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத் தினர்.

விலை : அணா 2

பஞ்சாங்கம் என்பதன் பொருள் சோதிடத்திற்கு அங்கமாயுள்ள திதி முதலிய ஐந்தனைத் தெரிவிப்பதென்பதே யாகும். அவற்றைத் தெரிவிப்பதற் கெழுந்த சுவடிகளில் நாளடைவில் சோதி டச் சார்பாக மக்கள் அறியவேண்டிய பல செய்திகள் சேர்க்கப்பெற்று வருகின்றன. அங்ஙனம் சேர்ப்பது மக்கட்கு உதவி புரிவதேயாகும். சைவப் பஞ்சாங்கமானது புகழ் பெற்ற பஞ்சாங்கக் கணித ஆசிரியர் களின் வழிவருவோரால் கணிக்கப்படும் சிறப்புடைய வாக்கிய பஞ்சாங்கங்கட்கு எத்துணையும் கணிதமுறையில் குறை வில்லாதிருப்பதுடன், அமைப்புமுறையில் அவற்றினும் விஞ்சிய சிறப்புடையதாக வுள்ளது. பஞ்சாங்கத்தின் ஒவ்வொரு திங்களை யொட்டியும் கிரக மாதசாரங்கள், நல்ல வேளைகள், குருபூசைத் திருநாட்கள், விரதாதிகள் என்பன சேர்த்திருப்பதும், ஒவ்வொரு நாளிலும் இலக்கின இருப்புக் காட்டியிருப்பதும் முதலியன அவற்றை எளிதில் அறிந்து கொள்ள உதவியாவன. மற்றும் வழுவில்லாத தமிழ் நடையில் யாவும் குறிக்கப்பெற்றுள்ளமை இப் பஞ் சாங்கத்தின் சிறப்பியல்புகளில் ஒன்றாம். நடராசர் திருவுருவை முகவேட்டிற் பெற் றிருப்பதும், அமாவாசை முதலியன இரண்டு நாட்களில் வரும் பொழுது சைவர்கள் கைக்கொள்ள வேண்டிய வற்றைத் தெரிவித்திருப்பதும் போல்வன சைவப்பஞ்சாங்கம் என்னும் பெயருக்குப் பொருத்தமாவனவாம். இதில் (நடராசர்) முழுக்கு என்பதனைத் திருமுழுக்கு எனக் குறித்தல் நலமாகும். இப்பொழுது கை யாளப் பெறும் வடசொற்கள் நாளடை வில் தூய தமிழ்ச் சொற்களாக மாற்றப் பெறுமென நம்புகிறோம். பல காரணங் களாலும் தமிழ் மக்கள் இப்பஞ்சாங்கத் தினை வாங்கும் கடப்பாடுடைய ரென்பது எம் எண்ணம்.